


# ஜீவ நீரோடை

உண்மையைச் சொல்! உரக்கச் சொல்!

தனிப்பிரதி ரூ. 15/- வருட சந்தா ரூ.150/

VOL. 22 ஏப்ரல் 2021 ISSUE 4

கர்த்தரின் இரக்கத்தை தேடுகின்றவன்
அவருடைய பரிதாபத்தைப் பெறுவான்.
அவருடைய உறவை தேடுகிறவன்
அவரால் பரிசுத்தம் அடைவான்.

ஜீவ நீரோடை

# ஜீவ நீரோடை

Vol-22 ஏப்ரல் Issue 4

மாத இதழ் 2021

ஆசிரியர் : சாம்சன் பால்

## சந்தா விபரம்

தனிப் பிரதி ரூ.15/- (இந்தியா)

ஆண்டு சந்தா ரூ.150/- (இந்தியா)

ஆண்டு சந்தா 20 டாலர், 15 யூரோ (வெளிநாடு)

ஆதரவு சந்தா ரூ. 1000/- (இந்தியா)

ஆதரவு சந்தா 150 டாலர், 125 யூரோ (வெளிநாடு)

**SAMSON PAUL**
126, Muthaiya Muthaliar St.,
Pondicherry - 605 003, INDIA
Phone : 0413-2236042
8870731147

E-mail : jeevaneerodai@gmail.com
Website : www.jeevaneerodai.com

## உள்ளே...

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே

கர்த்தருடைய அன்பும் ஐக்கியமும் உங்களோடிருப்பதாக. தேவனுடைய மகிமையான நாமத்தில் வாசகர்கள் அனைவருக்கும் மகிழச்சியான வாழ்த்துக்களைத் தெரிவிக்கின்றேன். இந்த இதழ் வாயிலாக கர்த்தர் அளிக்கும் புதிய செய்திகளை வாசகர்களோடு பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சி அடைகின்றேன்.

2020-ஆம் ஆண்டு முழுதும் கொரோனா பெருந்தொற்று அகில உலகத்தையும் அலசடிப்படுத்தியது. கோவிட் 19-ன் வேகம் படிப்படியாக இறங்கிக் கொண்டிருந்த நிலையில் உலகத்தில் பல்வேறு நாடுகளில் இரண்டாம் அலை பெருந்தொற்று பரவத் துவங்கியது. சகஜ நிலை திரும்பிக் கொண்டிருந்த சூழ்நிலையில் இந்தியாவிலும் மறுபடி கொரோனா பாதிப்புகள் வேகமடையத் துவங்கியிருக்கின்றன. கொரோனா விழிப்புணர்வு குறைந்து கொண்டிருக்கும் நிலையில் தேர்தல் கால சூழ்நிலைகளால் கொரோனா பெருந்தொற்று மறுபடியும் அநேகரைப் பாதிக்கும் அபாயம் உள்ளது. சமுக இடைவெளியைக் கடைப் பிடித்தல், முகக்கவசம் அணிதல் போன்றவற்றைத் தொடருவதோடு, ஊக்கமாக தேவ கிருபைக்காக ஜெபிப்போம்.

கொரோனா காலங்கள் ஏற்படுத்திய அதிர்வலைகளினால் தேவ ஊழியர்களின் நடுவிலும், விசுவாசிகளின் நடுவிலும் ஒரு ஆவிக்குரிய புத்தெழுச்சி ஏற்படக்கூடும் என்ற எதிர்பார்ப்பு பலரிடம் ஏற்பட்டது. ஆனால் பெரிய மாற்றங்களையோ, சீர்திருத்தங்களையோ, ஆவிக்குரிய வேகங்களையோ பெரிதாகப் பார்க்க இயலாத சூழ்நிலையே தொடருகிறது. பல சுவிசேஷகர்களும் பாஸ்டர்களும் தங்களின் வழக்கமான மாய்மாலப் பாதைகளிலேயே தொடருவதைக் காண முடிகிறது. மாதந்தோறும் புதிய வாக்குத்தத்தம் கொடுத்த போதகர்களும், சளைக்காமல் தீர்க்கதரிசனம் உரைத்தவர்களும் தாங்கள் சொன்னபடி காரியங்கள் நிகழவில்லை என்பதை திரும்ப திரும்ப காண நேர்ந்தது. ஆயினும், பொய் வாக்குத்தத்த கலாச்சாரங்களும், கள்ளத்தீர்க்கதரிசன நடைமுறைகளும் மாறவில்லை.

அமெரிக்க அதிபர் தேர்தலைக் குறித்த தீர்க்கதரிசனம் ஏராளமான பிரபல அமெரிக்க ஆப்ரிக்க போதர்களால் உரைக்கப்பட்டது. டோனால்ட் டிரம்ப் மீண்டும் அதிபராவார் என்று ஏராளமான அமெரிக்க போதகர்கள் அறிவித்தனர். தமிழக பிரபல சுவிசேஷகர்கள் சிலரும் அவ்விதமே தீர்க்கதரிசனம் உரைத்தனர். ஆனால், அமெரிக்க தேர்தல் முடிவுகள் இவர்கள் யாவரும் கள்ளத்தீர்க்கதரிசிகள் என்பதை உறுதிப்படுத்தியது. ஆயினும், வழக்கம் போல அவர்கள் தொடர்ந்து அதே பாணியில் தீர்க்கதரிசனம் உரைத்து தங்களை தீர்க்கதரிசிகளாகக் காட்டுவது விந்தையான விஷயமாக உள்ளது. அவ்விதமே மாதந்தோறும் பொய் வாக்குத்தத்தங்களை நம்பும் விசுவாசிகளும் கள்ளத்தீர்க்கதரிசனங்களுக்குச் செவிகொடுக்கும் கிறிஸ்தவர்களும் அந்த பழக்கத்திலேயே தொடருகின்றனர்.

கடைசி நாட்களில் சத்தியம் எது என்று அறிந்து அதில் நிலைத்திருக்க அதிக கவனம் தேவை. கர்த்தர் தாமே காலங்களுக்கேற்றபடி அதிக பகுத்தறிவின் கிருபையோடு செயல்பட உதவுவாராக.

கர்த்தர் உங்களோடிருப்பாராக.

*கர்த்தரின் பணியில்*
*உங்கள் சகோதரன்*
*சாம்செல்பால்*

# எதிர்மறைச் சூழ்நிலைகளை எதிர்கொள்ளவே தேவ கிருபை



**"அநேகர் தங்களுக்கு எதிராக நிற்கும் பிரச்சினைகளைப் பார்த்து சோர்வடைகின்றார்கள். ஆனால், அவற்றை மேற்கொள்ளுவதற்காகத் தேவன் வைத்துள்ள ஆதரவான காரியங்களைப் பயன் படுத்துவதில்லை. நமக்கு எதிராக இருக்கின்றவைகளையே நாம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. நமக்கு ஆதரவாக தேவன் காண்பிக்கும் காரியங்களையும் கவனிக்க வேண்டும்."**

வாழ்க்கையில் நாம் எதிர்பார்க்கும் விதமாகச் சூழ்நிலைகள் எல்லா நேரங்களிலும் அமைவதில்லை. தேவன் நமக்கு நன்மை செய்ய விரும்புகின்ற போது அங்கே அதற்கேற்றபடியான சுமுகமான ஒரு சூழ்நிலை ஏற்படும் என்று கூற இயலாது. நமக்கு எதிரானதாக சூழ்நிலைகள் இருந்தாலும் தேவன் நமக்கு ஆதரவான காரியங்களைச் செய்ய இயலும். எதிர்பார்த்த விதமாக உறவுகள் அமையாமல் போகலாம். எதிர்பார்த்த விதமாக பொருளாதார நிலைமை அமையாமல் போகலாம். எதிர்பார்த்த விதமாகப் போராட்ட மில்லாத அமைதியான சூழ்நிலை அமை யாமல் போகலாம். ஆயினும், அவற்றின் நடுவிலும் நாம் எதிர்பார்க்கும் அமைதி யையும், மகிழ்ச்சியையும், நன்மை களையும் நாம் காண முடியும்.

தேவ கிருபை என்பது தேவன் அருளும் விசேஷமானதோர் ஆவிக்குரிய ஆற்றல். (11 கொரி-12:9) ஆற்றல் என்பது எதிரிடையான சூழ்நிலை களைச் சந்திப்பதற்காகத் தரப்படுவதே. யுத்தப் பயிற்சி தரப்படுகிறது என்றால் யுத்தமே இல்லாத ஒரு அமைதிச் சூழ்நிலையில் வாழ்வதற்காக அல்ல. யுத்த களத்தைச் சந்தித்து ஜெயம் பெறுவதற்கே. கிருபை என்பது எதிர்மறையான சூழல்கள் இல்லா மல் வாழ்வதற்காக அல்ல. எதிர்மறையான சூழல்களில் வாழப் பழகிக்கொள் வதற்காகவே கிருபை வழங்கப்படுகிறது.

## எதிர்மறை குடும்ப உறவு சூழ்நிலைகள்

சில கணவர்கள் தாங்கள் விரும்பிய விதமாக மனைவி கிடைத்ததாக எண்ணிப் பூரிப்படைவார்கள். சில மனைவிகள் தங்களின் எதிர்பார்ப்பிற்கேற்ற கணவன் அமைந்ததாகத் திருப்தியடைவார்கள். சில கணவர்களுக்கு தங்களின் வாழ்க்கைத் துணைவியோடு வாழ்க்கை நடத்த எந்தச் சிரமமும் இருப்பதில்லை. சில மனைவிகளுக்கு தங்களுக்குக் கிடைத்த வாழ்க்கைத் துணைவரோடு வாழ்க்கை நடத்துவதில் எந்தக் கஷ்டமும் இருப்பதில்லை. ஆனாலும், எல்லோருக்கும் அப்படி அமைவதில்லை என்பது உண்மை. சிலருக்கு குடும்ப உறவுகள் சுமுகமாக இருப்பதில்லை. சிலர் குடும்ப உறவுகளைத் தக்க வைக்க கடுமையாகப் போராட நேரிடும். நாம் எல்லாவிதத்திலும் விரும்பிய விதமாக வாழ்க்கைத் துணைஅமைந்தால்தான் தேவ கிருபை கிடைத்திருக்கிறது என்று அர்த்தமல்ல. எதிர்மறையான குடும்ப உறவு சூழ்நிலைகளில் வாழப்பழகிக் கொள்வதற்கான ஆற்றலைப் பெறவே தேவ கிருபை தரப்படுகிறது.

*“எதிர் எதிரான சில குணங்களோடும், எதிர் எதிரான சில அணுகுமுறைகளோடும், எதிர் எதிரான சில புரிந்து கொள்ளுதல்களோடும் கணவனோ மனைவியோ இருக்க நேரிடலாம். அதற்காக இணைந்து வாழவே முடியாது என்று எண்ணிவிடக் கூடாது. தேவையெல்லாம் தேவ கிருபையே.”*



சில கணவர்களோடு வாழ்க்கை நடத்த அதிகமான சாந்த குணம் தேவைப்படும். சில மனைவிகளோடு வாழ்க்கை நடத்த அதிகமான சகிப்புத்தன்மை தேவைப்படும். சில வாழ்க்கைத் துணைவர்களோடு வாழ்வதற்கு அதிகமான மனப்பக்குவமும் பொறுமையின் ஆற்றலும் தேவைப்படும். சில குடும்ப உறவுகளைக் கட்டிக் காக்க மிக வலிமையான நற்குண வலிமை தேவைப்படும். ஆனால், இவற்றைப் பெற்றுக் கொள்ளவே தேவ கிருபை தரப்படுகிறது. பொறுமை, தாழ்மை, சாந்தம், சகிப்புத் தன்மை போன்றவற்றின் தேவை இல்லாமலே, சுமுகமாக வாழ்வதுதான் தேவ அருள்பெற்ற குடும்ப வாழ்க்கை என்று கூற இயலாது.

ஆபிரகாமுக்கும் சாராளுக்கும் இடையில் மனம் ஒருமித்த இசைந்த போக்கு எல்லா விஷயங்களிலும் இருக்கவில்லை. சில விஷயங்களில் இருவருடைய பார்வையும், எண்ணமும், அணுகுமுறையும், குணாதிசயங்களும் எதிர் எதிராகவே இருந்தன. ஆயினும், அவர்களின் குடும்ப வாழ்வு இறுதிவரை ஒன்றுபட்டதாகவும் வலிமையானதாகவும் விளங்கினது. ஆபிரகாம் தேவ கிருபையின் ஆற்றல் மூலம் பெற்ற நற்குணங்களால் குடும்ப உறவை கட்டிக் காத்தான்.

எதிர் எதிரான சில குணங்களோடும், எதிர் எதிரான சில அணுகுமுறைகளோடும், எதிர் எதிரான சில புரிந்து கொள்ளுதல்களோடும் கணவனோ மனைவியோ இருக்க நேரிடலாம். அதற்காக இணைந்து வாழவே முடியாது என்று எண்ணிவிடக் கூடாது. தேவையெல்லாம் தேவ கிருபையே. இது போன்ற எதிர்மறையான குணாதிசயங்களைச் சாந்தத்தோடு சந்தித்துக் குடும்ப உறவுகளில் வெற்றி காணவே தேவ வல்லமை அருளப்படுகிறது.

## எதிர்மறையான பொருளாதார நிலமைகள்

கர்த்தரை விசுவாசித்து அவருக்குப் பிரியமாக வாழ்கின்றவர்கள் ஆபிரகாமைப் போல செல்வச் சீமான் என்ற நிலைமையிலும் இருக்கக்கூடும். (ஆதி 13:2) இல்லாவிட்டால் பவுல் அப்போஸ்தலனைப் போல குறைவுகளின் நடுவிலும் வாழ நேரிடும். (1 கொரி 4:11) அதே வேளையில், செல்வச் செழிப்பில் வாழ்ந்தால் அது ஆசீர்வாதமான வாழ்க்கை என்றும், இல்லாமைகளுக்கு நடுவில் வாழ்ந்தால் அது ஆசீர்வாதமற்ற வாழ்க்கை என்றும் அர்த்தமாகிவிடாது. பொருளாதார நிலைமையில் எதிர்மறையான சூழ்நிலைகள் நிலவலாம். ஆனால், அது போன்ற சூழ்நிலைகளிலும் நாம் வாழப் பழகுவதற்கு தேவ கிருபை நமக்கு உதவி செய்கிறது. எனவேதான், அப்போஸ்தலனாகிய பவுல் எந்த நிலமையிலிருந்தாலும் மனரம்மியமாயிருக்கக் கற்றுக் கொண்டேன் என்று கூற முடிந்தது. (பிலிப்பியர் 4:11)

சில நேரங்களில் நம்மிடம் உள்ள பொருளாதார வலிமை நாம் விரும்புகின்றவைகளைப் பெறுவதற்குப் போதுமானவை அல்ல. சில நேரங்களில் அவை நம்முடைய தேவைகளைச் சந்திப்பதற்கும் போதுமானவை அல்ல. ஆனால், இந்த எதிர்மறையான அல்லது எதிரான பொருளாதார நிலைமையின் விளைவாக நாம் அமைதியையும், மகிழ்ச்சியையும், திருப்தியையும், இழக்கத் தேவையில்லை. நம்மிடம் உள்ள சிறிய அளவு பொருளாதாரத்தைக் கொண்டு நாம் வாழப்பழக வேண்டும். நாளைக்கே கர்த்தர் நமக்கு விசாலமான பொருளாதார சூழலைத் தரக்கூடும். ஆனால், இன்றைய நம்முடைய

"

***தேவன் நமக்குத் தருகின்ற கிருபையின் ஆற்றல் நாம் விரும்பிய எல்லாவற்றையும் தராமல் போகலாம். ஆனால், நம்மிடமுள்ள குறைந்த அளவு நன்மைகளைக் கொண்டு நல்ல மன நிறைவுடன் வாழ்வதற்கான தெய்வீக அனுக்கிரகத்தை தரும்.***

"



பலவீனமான பொருளாதாரச் சூழ்நிலையில் நாம் மனரம்மியமாக வாழப் பழக வேண்டும். தேவ ஐக்கியத்தினால் செயல்படுகின்ற தேவ கிருபை நமக்கு அந்த ஆற்றலைத் தர முடியும்.

பொருளாதார நிலைமைக்கேற்றபடி நம்முடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கு தேவ கிருபையைத் தேட வேண்டும். நம்மிடம் உள்ள கொஞ்சத்தைக் கொண்டு, நம்முடைய தேவைகளின் அளவை நிர்வாகம் பண்ணிக்கொள்ள, தேவன் அருளும் ஞானத்தைத் தேட வேண்டும். அநேகர் கஷ்டப்படுவது பொருளாதாரக் குறைவினால்தான் என்று கூற இயலாது. தங்களிடம் உள்ள பொருளாதார வலிமைக்கேற்றபடி, தங்களின் விருப்பங்களையும் எதிர்பார்ப்புகளையும் சுருக்கிக் கொள்ளும் மனப்பக்குவம் இல்லாமைதான், கஷ்டங்களுக்கு முக்கிய மான காரணம்.

நம்மிடம் உள்ள கொஞ்சத்திற்காக கர்த்தருக்கு நன்றி சொல்லி அதனைக் கொண்டு நாம் திருப்தியடைவதற்கான மனநிலையைத் தரும்படி கர்த்தரிடம் கேட்க வேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள் கானகத்தில் மன்னா என்னும் உணவை தேவனிடமிருந்து பெற்றார்கள். ஆனால், அதில் அவர்கள் திருப்தியடையாமல் முறுமுறுத்தார்கள். இந்த மன்னாவைத் தவிர இங்கே வேறொன்றுமில்லையே என்று அவர்கள் குறை சொல்லிப் புலம்பினார்கள். (எண் 11:6) தங்களுக்குக் கிடைக்கப்பெற்ற நன்மையின்மேல் அதிருப்தியுற்று அவர்கள் முறுமுறுத்ததால், இன்னும் இன்னும் அவர்களுக்குப் பாடுகளே பெருகியது.

ஆம். தேவன் நமக்குத் தருகின்ற கிருபையின் ஆற்றல் நாம் விரும்பிய எல்லாவற்றையும் தராமல் போகலாம். ஆனால், நம்மிடமுள்ள குறைந்த அளவு நன்மைகளைக் கொண்டு நல்ல மன நிறைவுடன் வாழ்வதற்கான தெய்வீக அனுக்கிரகத்தைத் தரும். எனவேதான், அப்போஸ்தலனாகிய பவுல், போதும் என்ற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம் என்று எழுதினான். (1 தீமோத்தேயு 6:6)

## எதிராக வரும் சோதனைகள்

இந்த பூமியில் நாம் எதற்காக தேவ கிருபையையும் தேவ வல்லமையையும் தேட வேண்டும்? நமக்கு எதிராக எதுவும் நேரிடாத சுமுகமான பிரச்சினைகளற்ற ஒரு சூழ்நிலையைப் பெறுவதற்காக அல்ல. எல்லாம் நமக்கு ஆதரவாகவே நிகழ்வதற்கேற்ற ஒரு பூமியில் நாம் வாழவில்லை. இந்த சபிக்கப்பட்ட பூமியில் நமக்கு எதிராக பல காரியங்கள் நிகழக்கூடும். நாம் அவைகள் அவ்விதம் ஏன் வருகின்றது என்று கேள்வி கேட்டுக்கொண்டிருப்பதால் நன்மை ஏதும் இல்லை. அவற்றைச் சந்திப்பதற்கு தேவன் அளிக்கும் ஆதரவுகளைப் பெற்றிட நாம் முன்வர வேண்டும். சிலர் தங்கள் வாழ்க்கையில் சந்திக்க நேரிட்ட பலவிதமான துன்பங்களைக் கண்டு, ஏன், ஏன் என்ற கேள்விகளோடு தொடர்கின்றனர். சிலர் தாங்கள் காண நேரிட்டுள்ள சோதனைகளுக்காக தேவனிடம் மனவருத்தப்படுகின்றனர். எனவே, சிலர் கர்த்தருக்குரிய காரியங்களில் கொண்டிருந்த ஈடுபாடுகளை விட்டுவிடுகின்றனர்.

அநேகர் தங்களுக்கு எதிராக நிற்கும் பிரச்சினைகளைப் பார்த்து சோர்வடைகின்றார்கள். ஆனால், அவற்றை மேற் கொள்ளுவதற்காக தேவன் வைத்துள்ள ஆதர



*"எதிர்மறையான சோதனைகளைப் பார்த்து அதிருப்தி அடைவதும் சோர்வடைவதும் அல்ல. தேவன் நமக்களித்திருக்கும் நல்ல ஐக்கி யத்தின் பலத்தைக் கொண்டு அவற்றை எதிர்கொள்ள நாம் அழைக்கப்பட்டிருக்கின்றோம் என்பதை உணர வேண்டும்"*

வான காரியங்களைப் பயன்படுத்துவதில்லை. நமக்கு எதிராக இருக்கின்றவைகளையே நாம் பார்த்துக் கொண் டிருக்கக் கூடாது. நமக்கு ஆதரவாக தேவன் காண்பிக்கும் காரியங்களையும் கவனிக்க வேண்டும்.

பவுல் தனக்கு எதிராக ஒரு முள் இருப்பதை உணர்ந்தபோது, கர்த்தர் தம்முடைய கிருபை அவனுக்கு ஆதரவாயிருப்பதைப் பார்க்கச் சொன்னார். (11 கொரிந்தியர் 12:9) பிசாசானவன் எப்பொழுதும் நமக்குப் பாதகமாக இருக்கின்ற சூழ்நிலைகளையே பார்த்துக் கொண் டிருக்கத் தூண்டுவான். அதன் மூலம் நமக்குச் சாதகமாக தேவன் வைத்திருக்கின்றவைகளை நாம் பயன்படுத்தவிடாமல் செய்வான்.

கானானை வேவு பார்க்கச் சென்றவர்களில் பத்துப் பேர் எதிர்மறையான சோதனைச் சூழ்நிலைகளை மட்டுமே கவனித்தனர். தங்களுக்கு எவை எவை பாதகம் என்று அறிவதிலேயே கவனம் செலுத்தினார்கள். எனவே, தாங்கள் ஒரு போதும் கானானைச் சுதந்தரிக்க முடியாது என்ற முடிவிற்கு வந்தனர். (எண்ணாகமம் 13:31) அதே வேளையில், அதே விதமான எதிர்மறைச் சூழ்நிலைகளைப் பார்த்த யோசுவாவும், காலேபும் வேறு விதமாகச் சிந்தித்தனர். அவர்கள் தங்களுக்கு ஆதரவாயிருந்த சாதக விஷயங்களைக் கவனித்தனர். தேவன் நம்மோடிருக்கின்றார். அவர் அளித்த வாக்குத்தத்தங்கள் உள்ளன. அவர் இதுவரை நடத்திவந்த விதங்களைக் குறித்த சாட்சி அனுபவங்கள் உள்ளன. இதுபோன்ற சாதகங்களைக் கவனித்த அந்த இருவரும், நாம் எளிதாகச் ஜெயிக்க முடியும் என்று கூறினார்கள். (எண்ணாகமம்13:30)

வாழ்க்கையில் நெருக்கங்களை மட்டும் பார்க்கக் கூடாது. நெருக்கப்பட்டாலும் ஒடுங்கிப் போகாமல் தாங்கும் தேவ வல்லமை நம்மிடம் வேண்டும். வாழ்க்கையில் எதிராக வருகின்ற பிரச் சினைகளையே பட்டியல் போட்டுக் கொண் டிருக்கக்கூடாது. நமக்கு ஆதரவாயிருக்கும் தேவ கிரு பையை நெருக்கடி நேரங்களில் அதிக மாகத் தேட வேண்டும். எதிர்மறையான சோதனைகைளப் பார்த்து அதிருப்தி அடைவதும் சோர்வடைவதும் அல்ல. தேவன் நமக்களித்திருக்கும் நல்ல ஐக்கியத்தின் பலத்தைக் கொண்டு அவற்றை எதிர்கொள்ள நாம் அழைக்கப் பட்டிருக்கின்றோம் என்பதை உணர வேண்டும்.

நான் விழுந்தாலும் எழுந்திருப்பேன். நான் இருளிலே உட்கார்ந்தால் கர்த்தர் எனக்கு வெளிச்சமாயிருப்பார் என்றான் மீகா தீர்க்கதரிசி. (மீகா 7:8) வீழ்வதும், இருளில் உட்கார நேரிடுவதும் எதிர்மறையான சோதனைகள்தான். ஆனால், அவற்றையே அவன் பார்த்துக் கொண் டிராமல் தனக்கு ஆதரவாகத் தேவன் இருப்பதை உணர்ந்து நம்பிக்கையோடு பேசினான்.

ஆம், வாழ்க்கையில் எதிர்மறையாக நிலவும் சூழ்நிலைகளைக் கண்டு சோர்ந்து போகாமல் தேவனுடைய ஐக்கியத்தோடு வாழ்வதின் விளைவாக நமக்கு ஆதரவாகச் செயல்படும் தேவ கிருபைகளை நாம் விசுவாசித்துச் செயல்பட வேண்டும்.





# ஆவிக்குரிய சந்தோஷத்திற்கு எதிரான இயலாமைகள்

**" நாம் கோபமாயிருப்பதற்கும், வெறுப்புணர்வுடனிருப்பதற்கும், கசப்படைவதற்கும் நியாயமான காரணங்கள் இருக்கலாம். ஆயினும், அன்பு ஆளுகை செய்ய வேண்டிய மனதில் கோபமும், வெறுப்பும் ஆளுகை செய்தால், அங்கே தேவன் தம்முடைய சந்தோஷத்தை வைக்க முடியாது. கசப்பையும், கோபத்தையும் வைத்திருக்கும் இருதயம், தேவ சந்தோஷத்தை அனுபவிக்கும் தன்மையை இழந்து விடும். "**

ஆவிக்குரிய வாழ்க்கையில் நாம் சலித்துக் கொண்டு அல்ல, சந்தோஷத்தோடு வாழ வேண்டும். தேவ உறவுடன் வாழ்கின்ற வாழ்க்கையில் சூழ்நிலைகளைக் கடந்து செயல்படும் சந்தோஷத்தைப் பெறுவது முக்கியமான ஓர் ஆவிக்குரிய அனுபவம். (யோவான் 15:11) ஆனால் ஆவிக்குரிய வாழ்க்கையில் பக்தியோடு பல காரியங்களைச் செய்கின்ற அநேகரிடம் ஆவிக்குரிய சந்தோஷம் அனுபவத்தில் இல்லை. அவர்கள் துக்கமான மனநிலையோடு கிறிஸ்தவர்களாகத் தொடருகின்றனர். அவர்கள் தங்களுக்குள் சந்தோஷமாயில்லை என்பதை உறுதிப்படுத்தும் அடையாளங்களையே பெற்றிருக்கின்றனர். ஏன் சந்தோஷத்தோடு கிறிஸ்தவ வாழ்க்கையை வாழ இயலவில்லை என்பதற்கான சில காரணங்களைப் பார்ப்போம்.

## திருப்தியடைய இயலாத மனநிலை

அநேகர் தாங்கள் விரும்பிய விதமான

அளவிற்கு நன்மைகளைப் பெற்று நன்றாக வாழ்ந்தால்தான் திருப்தியடைய முடியும் என நம்புகின்றனர். தாங்கள் எதிர்பார்த்த அளவு வாழ்க்கையில் ஆசீர்வாதங்களைப் பெற இயலாமல் போகும் போது தாங்கள் திருப்தியாய் வாழ்வது எப்படி என்ற கேள்வியோடு இருக்கின்றனர். நிரம்பி வழியும் அள விற்கு நன்மைகளைப் பெற முடிந்தால் தான் திருப்தி நிலையை எட்ட முடியும் என அவர்கள் எண்ணுகின்றனர். திருப்தி நிலையை எட்ட இயலாமல் போகும் போது ஆவிக்குரிய வாழ்க்கையில் மகிழ்ச்சி நிலையையும் எட்ட இயலாது.

கிறிஸ்துவோடு வாழ்கின்ற போது நம்முடைய வாழ்க்கையின் பல பகுதிகள் நன்மைகளினால் நிரம்பி வழியும் என் பது உண்மை. (சங்கீதம் 23:5) ஆயி னும், சில குறைவுகளோடு வாழ நேரிட் டால் அது ஆசீர்வாத நிலைமைக்கு எதிரா னதல்ல. குறிப்பிட்ட அளவுகளை நாம் எட்ட இயலாவிட்டாலும் நமக்குக் கிடைத்த அளவுகளில் நாம் திருப்தியடையப் பழக வேண்டும். அதிகமாகக் கிடைத்தால்தான் அல்லது போதிய அளவு கிடைத்தால்தான் திருப்தி காண முடியும் என்பது அல்ல. போதிய அளவை எட்டாவிட்டாலும்கூட கிடைத்த அளவுகளுக்குள் மனதை திருப்தியடையச் செய்ய முடியும். அநேகர் தங்களுக்கு அமைந்த நிலைமைகளில் திருப்தி எட்ட இயலாமல் போவதால், அவர்களால் ஆவிக்குரிய சந்தோஷத் தையும் எட்ட முடியவில்லை. கொஞ்ச மாயினும் அது போதும் என்று எண்ண இயலாமல் போவதால் திருப்தி இல்லை.

உங்களுக்கு இருக்கிறவைகள் போதும் என்று எண்ணுங்கள் என்று எபிரெய நிருப ஆக்கியோன் தருகின்ற ஆலோசனையை வேதாகமத்தில் பார்க் கின்றோம். (எபிரெயர் 13:5) எனவேதான்,

**“தேவ உறவுடன் வாழ்வது என்பது ஒரு சிந்தனையாக அல்ல. அது நம்மால் உணரப்படுகிறதாகவும் அனுபவிக்கப்படுகிறதாகவும் இருக்க வேண்டும்.”**



போதுமென்ற ஓர் மனதின் தேவையை அப்போஸ்தலனாகிய பவுல் வலியுறுத்து கிறான். (1தீமோ 6:6) நம்மிடம் இருப் பவைகள் கொஞ்சமாயினும் கர்த்தர் நம்மோடிருக்கின்றார் என்ற நம்பிக்கை யினால் நாம் அதிக திருப்தி காண இயலும். அவ்விதம் காண இயலாமல் போவதின் விளைவுதான் ஆவிக்குரிய வாழ்க்கையில் சந்தோஷம் காண முடியாததின் முக்கியமான ஒரு காரணம்.

## தேவ ஐக்கியத்தை தீவிரமாகத் தேட இயலாத மனநிலை

ஆவிக்குரிய வாழ்க்கையில் சந் தோஷமாக இருப்பதற்கு மிக முக்கியமான காரணம் கர்த்தரோடுள்ள ஐக்கியமே. அந்த தேவ ஐக்கியத்தை தீவிரமாகத் தேடுகின்ற ஒரு மனநிலை இல்லா விட் டால், ஆவிக்குரிய சந்தோஷத்தைக் காண இயலாது. அநேகர் நல்ல பக்தி உடையவர்கள்தான். ஆயினும், தேவனை ஐக்கிய ரீதியாகவும், உறவு ரீதி யாகவும் தேடுவதில்லை. ஜெபம், வேத வாசிப்பு, ஆராதனை, காணிக்கை என பல விஷயங்கள் உண்டு. ஆனாலும், தேவ ஐக்கிய ஆசையோடு கர்த்தரைத் தேடுவதில்லை. எல்லாம் கடமையாகவும் வழிபாட்டுச் செயலாகவும், பக்தியுணர் வைத் தக்க வைக்கும் செயல்களாகவே இருக்கும். தகப்பனைப் பிள்ளை தேடுவது போலவும், நண்பரை நண்பன் தேடுவது போலும், உண்மையான ஒரு ஐக்கியத் தேடல் இராது. ஜெப வேளை, வேத வாசிப்பு வேளை, ஆராதனை வேளை என சில வேளைகளை முடித்ததும், பக்திக் கடமைகள் முடிந்ததாக எண்ணி விடுவார்கள். உண்மையாகத் தேவ ஐக்கியத்தை விரும்பித்தேடும் தீவிர மனநிலை இல்லாததால், ஆவிக்குரிய சந்தோஷத்தை அடைய இயலாமல் போகிறது.

உம்முடைய சமுகத்தில் எனக்குப் பரிபூரண ஆனந்தம் உண்டு என்றான் தாவீது. (சங்கீதம் 16:11) ஜெபக் கடமை முடிந்தது. வேத வாசிப்பு கடமை முடிந்

**“சில விஷயங்களைத் தவறானது என்றும், தேவனுக்குப் பிரியமற்றது என்றும் அறிகின்ற வாய்ப்பைப் பெற்றாலும், அவைகளைச் சீரியசாக எடுத்துக் கொள்வதில்லை. இப்படிப்பட்டவர்களின் ஆத்துமாவில் தேவ சந்தோஷம் தங்க இயலாது.”**



தது. ஆராதனை கடமை முடிந்தது என்ற விதமாக நம்முடைய ஆவிக்குரிய அனுபவம் இருக்கக்கூடாது. ஜெபமோ, வேத வாசிப்போ, ஆராதனையோ எது வாயினும் தேவ சமுகத்தை அனுபவிப் பதே நம்முடைய நோக்கமாயிருக்க வேண்டும். தேவ உறவுடன் வாழ்வது என்பது ஒரு சிந்தனையாக அல்ல. அது நம்மால் உணரப்படுகிறதாகவும் அனு பவிக்கப்படுகிறதாகவும் இருக்க வேண் டும். அந்த விதமான வாஞ்சையோடும் எதிர்பார்ப்போடும் கர்த்தருடைய ஐக்கியம் தேடப்பட்டால்தான் இருதயம் தேவ ஐக்கியத்தால் மகிழ்ச்சியைக் காணும்.

ஆனால், இவ்விதமான தேவ ஐக்கிய ஆசையோடு கர்த்தரை தீவிரமாகத் தேடுகின்ற மனநிலை பலருக்கு இல்லை. அவர்களின் இருதயம் கடமைக்காக கர்த்தரைத் தேடுமேயன்றி, உண்மை யாக கர்த்தரைத் தேடாது. எனவே, அந்த இயலாமையின் விளைவாக அவர்களால் ஆவிக்குரிய சந்தோஷத்தை அனு பவித்துப் பார்க்க முடியவில்லை.

## பிறரைக் குறித்த எதிர்மறை எண்ணங்களை மாற்ற முடியாத மனநிலை

சிலர் தேவ பக்திக்குரிய எல்லா நட வடிக்கைகளிலும் ஈடுபட்டுக் கொண்டே யிருப்பார்கள். ஜெபம், வேத வாசிப்பு, ஆராதனை, ஊழியம், காணிக்கை என எந்த ஒன்றிலும் குறைவு வைக்காமல் செயல்பட்டுக் கொண்டேயிருப்பார்கள். ஆயினும், அவர்கள் கர்த்தருக்கேற்ற சந்தோஷத்தைக் காண்பதில்லை. ஆவிக்குரிய வாழ்க்கையின் விளைவாக அவர்கள் விசேஷமான மனமகிழ்ச்சி அனுபவங்கள் எதையும் பெறுவதில்லை.

இதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் முக்கியமான ஒன்று பிறர்மேல் எதிர்மறையான எண்ணங்கள் கொண் டிருத்தல் ஆகும். வாழ்க்கைச் சூழ்நிலை களில் சிலரைக் குறித்த கோபம், எரிச்சல், வெறுப்பு, கசப்பு, அதிருப்தி போன்றவை ஏற்படுவது இயற்கை. ஆனால், அவ் விதமான உணர்வுகள் இருதயத்தில் தங்கிவிட்டால் அவை கர்த்தரால் வரும் மகிழ்ச்சியைத் தடுத்துவிடும். அநேகர் தங்களுக்கு சிலர்மேல் ஏற்பட்டுள்ள அதிருப்தி உணர்வுகளையும், கோப உணர்வுகளையும், வெறுப்புணர்வு களையும் விட்டு விட இயலாத மன நிலையின் விளைவாகவே, கர்த்தரால் வருகின்ற மகிழ்ச்சியைப் பெறாமல் போகிறார்கள்.

எனவேதான், அப்போஸ்தலனாகிய பவுல், எபேசு திருச்சபை மக்களுக்குக் கடிதம் எழுதும் போது, சகலவிதமான கசப்பும், கோபமும், மூர்க்கமும், கூக் குரலும், தூஷணமும் மற்ற எந்தத் துர்க் குணமும் உங்களை விட்டு நீங்கக்கடவது என்று எழுதினான். (எபேசியர் 4:31) நாம் கோபமாயிருப்பதற்கும், வெறுப்புணர் வுடனிருப்பதற்கும், கசப்படைவதற்கும் நியாயமான காரணங்கள் இருக்கலாம். ஆயினும், அன்பு ஆளுகை செய்ய வேண்டிய மனதில் கோபமும், வெறுப்பும் ஆளுகை செய்தால், அங்கே தேவன் தம்முடைய சந்தோஷத்தை வைக்க முடியாது. கசப்பையும், கோபத்தையும் வைத் திருக்கும் இருதயம், தேவ சந்தோ ஷத்தை அனுபவிக்கும் தன்மையை இழந்து விடும். ஆம், வெறுப்புணர்வை விட்டுவிட இயலாத ஒரு மனநிலை, சந்தோஷத்திற்கு ஒரு மிகப்பெரிய எதிரியாகிவிடுகிறது.

## தவறான விஷயங்களை விட்டுவிட இயலாத மனநிலை

பொல்லாங்காய்த் தோன்றுகின்ற எல்லாவற்றையும் விட்டு விலகுங்கள் என்று வேதம் சொல்கிறது. (1 தெச 5:22) ஆவிக்குரியவர்கள் அல்லது கர்த்தருக்குப் பிரியமாக வாழ வந்தவர்கள் எவரும் எது தவறு, எது சரி என்று பகுத்துப் பார்க்கும் ஆவிக்குரிய பார்வை உடையவர்களாக இருக்க வேண்டும். ஒருவருக்குள் தேவ உறவினால் கிடைக்கும் ஆவிக்குரிய சந்தோஷம் தங்க வேண்டுமானால், ஒரு விஷயம் தவறு என அறியப்படும்போது அதனை விட்டு விலக வேண்டும். தவறானவைகளைக் குறித்து கவலைப்படாமல் நாம் எவ்வளவு ஆராதித்தாலும், ஜெபித்தாலும், பக்தியாய் வாழ்ந்தாலும் ஆத்துமா தேவ சந்தோஷத்தை உணராது. தவறான விஷயங்கள் தேவன் அருளும் சந்தோஷத்தை நாம் அனுபவிக்க விடாமல் தடை செய்யும்.

அநேகர் பலவித நல்ல பக்திச் செயல்களோடு தங்களை இணைத்துக் கொண்டவர்களே. ஆயினும், தவறான சிந்தனை, தவறான சுபாவம், தவறான பழக்க வழக்கம், தவறான பொழுதுபோக்கு, தவறான உறவுகள், தவறான நடத்தைகள் என ஏதாவது சில விஷயங்கள் தங்களை விட்டு விலக்கப்படாதிருப்பதைக் குறித்து அவர்கள் கவலைப்படுவதில்லை. சில விஷயங்களைத் தவறானது என்றும், தேவனுக்குப் பிரியமற்றது என்றும் அறிகின்ற வாய்ப்பைப் பெற்றாலும், அவைகளை அவர்கள் சீரியசாக எடுத்துக் கொள்வதில்லை. இப்படிப்பட்டவர்களின் ஆத்துமாவில் தேவ சந்தோஷம் தங்க இயலாது.

சிலர் தவறானவைகளைத் தங்களிடம் இருப்பதைக் கண்டாலும் அவற்றை அகற்றுவதற்கு தங்களிடம் பெலன் இல்லை என்பதை அறிவார்கள். எனவே, சில விஷயங்கள் தவறானவைகளாயிருந்தும் அவற்றை விலக்குவதற்கு இயலாததால், அவற்றைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ளப் பழகி விடுகின்றனர். காலப்போக்கில் ஒருபுறம் தவறுகளில் தொடர்ந்துகொண்டே, மறுபுறம் பக்தி விஷயங்களோடு இணைந்திருக்கும் ஒரு மாய்மால அனுபவம் நிலை பெற்றுவிடும். இப்படிப்பட்ட மனநிலை உடையவர்கள் ஆவிக்குரியவர்கள் பெற வேண்டிய ஆவிக்குரிய சந்தோஷத்தை தங்க ளுக்குள் பெறுவதற்கான வழியை அடைத்துவிடுகின்றனர்.

## ஏன் இந்த இயலாமைகள்?

திருப்தி அடைய இயலாமை, தேவ ஐக்கியத்தை தீவிரமாகத் தேட இயலாமை, பிறரைக்குறித்த எதிர்மறை உணர்வை விட இயலாமை, தவறுகளை விலக்க இயலாமை போன்ற இயலாமைகளின் அடிப்படைக் காரணம் என்ன? இவ்வித இயலாமைகளின் விளைவாக தேவன் அருளும் ஆவிக்குரிய சந்தோஷம் இழக்கப்பட நேரிடுவதின் காரணங்கள் என்ன?

மிக முக்கியமாக இந்த இயலாமைகளின் காரணங்கள் நான்கு, 1. ஆவிக்குரிய மறுபிறப்பின் அனுபவம் பெறாமை 2. ஆவிக்குரிய தரிசனம் சார்ந்து செயல்படாமை 3. விசுவாசத்தைப் பயன்படுத்தாமை. 4. ஆவிக்கேற்ற முயற்சிகள் இல்லாமை. அநேகர் பக்தியுடையவர்களாயினும் உண்மையான இரட்சிப்பின் அனுபவம் என்ற அடிப்படை இல்லாத

தால், அவர்களால் எவ்வளவு முயன்றாலும் இயலாமைகளை மேற்கொள்ள இயலவில்லை. இரட்சிப் பின் அனுபவம் பெற்றவர்களிடம் மட்டுமே பரிசுத்த ஆவியின் வல்லமை செயல்படும். அவர்களால் மட்டுமே மேற்கண்ட விஷயங்களில் வெற்றி பெற இயலும்.

அவ்விதமே தரிசனம் அல்லது உறுதியான இலக்கு வேண்டும். கர்த்தருக்கேற்ற வாழ்க்கை வாழ வேண்டும் என்பது தரிசனமாகவும், இலக்காகவும் மாறினால் தான் இயலாமைகள் அகலும். மேலும், அனைத்தும் சுய முயற்சியால் அல்ல. விசுவாசத்தாலேயே ஆகிறது. எனவே, இயலாதவைகளை தேவனைச் சார்ந்து இயலும் என்று விசுவாசிக்க வேண்டும். இறுதியாக, தேவன்மேல் வைக்கும் விசுவாசத்தோடும், தேவ பலத்தைக் குறித்த நம்பிக்கையோடும், முயற்சிகளும் அவசியம். முடியாதது போன்று தோன்றுகிறவைகளை முடியாதவை என விட்டு விடாமல், விசுவாசத்தோடு திரும்பத் திரும்ப முயற்சிக்க வேண்டும்.



# NEWS இந்திய செய்திகள்

❀ 2016-முதல் 2020-ம் ஆண்டுவரை கட்சி மாறி போட்டியிட்ட 433 எம்.பி., எம்.எல்.ஏ-க்கள் குறித்து ஜனநாயக சீர்திருத்த சங்கம் என்ற அமைப்பு ஆய்வு செய்தது. இவர்களில் 170 எம்.எல்.ஏ-க்கள் காங்கிரஸ் கட்சியிலிருந்து சென்றவர்கள் 182- எம்.எல்.ஏ-க்கள் பா.ஜா.க-வில் சேர்த்துள்ளனர். தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் எம்.எல்.ஏ-க்கள் கட்சி மாறியதின் விளைவாகவே மத்திய பிரதேசம், மணிப்பூர், கோவா, அருணாசல பிரதேசம், கர்நாடகா, புதுச்சேரி போன்ற மாநிலங்களில் அரசுகள் கவிழ்ந்தன. தேர்ந்தெடுக்கப்பட்ட எம். எல் ஏக்கள் கட்சி மாறி ஆட்சியை கவிழ்ப்பது இந்தியாவில் அவமானமான ஒரு அரசியல் கலாச்சாரமாக தொடருகிறது.

❀ 2016-ம் ஆண்டு நவம்பர் 8-ம் தேதி 500 மற்றும் 1000 ரூபாய் நோட்டுகள் செல்லாது என்று பிரதமர் நரேந்திர மோடி அறிவித்தார். அதற்கு பதிலாக 2000 ரூபாய் நோட்டுகள் அச்சிடப்பட்டு புழக்கத்தில் வந்தன. ஆனால் கடந்த இரண்டு ஆண்டுகளாக 2000 ரூபாய் நோட்டுகள் புதிதாக அச்சிடப்படாத தகவலை லோக் சபாவில் எழுப்பப்பட்ட கேள்வி ஒன்றுக்கு மத்திய நிதித்துறை இணை அமைச்சர் அனுராஜ் தாக்கூர் தெரிவித்துள்ளார். தற்போது புழக்கத்தில் உள்ள ரூபாய் நோட்டுகளில் 2000 ரூபாய் நோட்டுகள் 2.01 சதவீதம் மட்டுமே உள்ளது. இதனால் 2000 ரூபாய் நோட்டுகளை செல்லாது என அறிவிக்கும் திட்டம் ஏதாவது அரசாங்கத்திடம் உள்ளதோ என சந்தேகத்தை எழுப்பியுள்ளது.

❀ தன்னார்வ வணிக மற்றும் பொதுத்துறை வாகனங்கள் நவீனமயமாக்கல் திட்டத்தை மத்திய அமைச்சர் நிதின் கட்காரி மக்களைவையில் அறிவித்தார். 15 ஆண்டுகளுக்கு அதிகமாக உபயோகிக்கப்பட்ட வணிக வாகனங்களும் 20 ஆண்டுகளுக்கு அதிகமாக பயன்படுத்தப்பட்ட தனிநபர் வாகனங்களும் சோதிக்கப்பட்டு தேர்ச்சி பெற தவறினால் அவை அகற்றப்பட்டு அழிக்கப்படுவதற்கு குறிக்கப்படும் என்று கூறியுள்ளார்.




# ஆவிக்குரிய சூடு சொரணை இல்லா விட்டால்...

“ பல கிறிஸ்தவர்கள் தேவ ஊழியர்கள் என்று அறியப்படுகிறவர்களிடம் சத்தியத்திற்கு எதிரான எத்தனை முரண்பாடான செயல்களும் நடத்தைகளும் இருந்தாலும், அவர்களைக் கனப் படுத்தவும், அவர்களுக்குக் காணிக்கை கொடுக்கவும், அவர்களின் போலியான ஊழியங்களில் பங்கேற்கவும் பழகிப் போய்விட்டார்கள். ”

சத்தியமற்றவைகளையும், தேவ வார்த்தைக்கு விரோதமானவை களையும், ஆவிக்கேற்ற ஆரோக்கிய மற்றவைகளையும், அருவருப்பாக உணருவதற்கு ஆவிக்குரிய நுண் ணுணர்வு வேண்டும். பன்றி சாக்கடைப் பகுதியில் மேய்ந்தால் அது சாக்கடை யின் அசுத்த வாசனையை அருவருப் பாக உணராது. ஏனென்றால், அவ் விதமான ஒரு உள்ளுணர்வோ நுண் ணுணர்வோ அதற்குக் கிடையாது. அது சாக்கடைப் பகுதிகளைச் சாதாரண மாகவும், சகஜ மானதாகவும், ஏன் விருப் பத்தக்கதாகவும் எடுத்துக் கொள்ளும் இயற்கைத் தன்மை உடையது. ஒரு வேளை ஒரு ஆடு அந்தப் பக்கமாக

வந்தால் அதனால் அந்த துர்வாச னையை ஏற்றுக்கொள்ள இயலாமல் அருவருப்பாய் உணர்ந்து விலகிப் போகும்.

இன்று பெரும்பாலான கிறிஸ்தவர் களுக்கு சத்தியத்திற்கு விரோதமான வைகளையும், சத்தியத்திற்கு ஏற்ற தல்லாத தரமற்றவைகளையும், தீட்டான வைகளாக உணரும் ஆவிக்குரிய தன்மை கிடையாது. அவர்கள் பொய் சொல்லும் போதகர்களையோ, கள்ளத் தீர்க்கதரிசிகளையோ, வேத வார்த்தைக்கு விலகிப் போய் மாய்மாலமாய் வாழும் பாஸ்டர்களையோ, சுவிசேஷகர் களையோ அருவருக்கத்தக்கவர்களாகப் பார்க்கவில்லை. ஏனென்றால், அவர் களுக்குச் சத்திய உணர்வு இல்லை. அவர்களுக்குப் பரிசுத்த உணர்வு இல்லை. நீ திருடனைக் காணும்போது அவனோடு ஒருமித்துப் போகிறாய் விபச்சாரரோடும் உனக்குப் பங்குண்டு என்று சங்கீதம் 50:18 கூறுகின்றது. இதே நிலைமைதான் இன்றைய பெரும் பாலான கிறிஸ்தவர்களின் நிலைமை.

## சத்திய உணர்வு எங்கே?

சில கிறிஸ்தவப் போதகர்களும், சுவிசேஷகர்களும் மாய்மாலர்கள் என்பது பல கிறிஸ்தவர்களுக்குத் தெரியும். சில கிறிஸ்தவ பாஸ்டர்களும் சுவிசேஷகர் களும் பொய்யாக வாக்குத்தத்தம் தரு கிறவர்கள் என்பதும், அவர்கள் உரைத்த பல தீர்க்கதரிசனங்கள் கள்ளத் தீர்க்க தரிசனங்கள் என்பதும் பல கிறிஸ்தவர் களுக்குத் தெரியும். சில பிரபலமான கிறிஸ்தவப் போதகர்கள் ஜனங்களின் காணிக்கைப் பணத்தைக் கொண்டு, மித மிஞ்சிய சொகுசுகளையும், அதிநவீன ஆடம்பர வாழ்க்கையையும் ஏற்படுத்திக் கொண்டவர்கள் என்பது பல கிறிஸ் தவர்களுக்குத் தெரியும். சில நவீனயுக சுவிசேஷகர்களும் பாஸ்டர்களும் போதகர் களும் தங்களின் பிள்ளைகளை சினிமா

**“ ஒருவரிடம் குறைந்த பட்ச பொது அறிவு அல்லது காமன் சென்ஸ் இருந்தாலே போதும். இந்த உலக ஆவியால் நடத்தப்படும் இவ்வித ஊழியர்களின் போலி ஆராதனைக் கூட்டங்கள் மாய்மாலத்தின் உச்சகட்டம் என்பது புரிந்து விடும். ”**



நடி கர்களைப் போலவும், சினிமா நடிகை களைப் போலவும் மித மிஞ்சிய கவர்ச்சித் தோற்றமளிக்கும் ஃபேஷன் நட்சத்திரங் களைப் போலவும் வளர்க்கின்றார்கள் என்பது பல கிறிஸ்தவர்களுக்குத் தெரி யும். சில பிரபலமான போதகர்களும் சுவி சேஷகர்களும் பணம் பொருள் விஷயத் தில் குற்றங்கள் பல புரிந்தவர்கள் என் பது பல கிறிஸ்தவர்களுக்குத் தெரியும்.

பரிசுத்தத்தையும், ஒழுக்கத்தையும், உண்மையையும், தாழ்மையையும், நேர்மையையும் மிக முக்கிய கிறிஸ்தவ அடையாளங்களாகக் காண்பிக்கும் வேதாகமத்தைப் படிக்கின்ற இவர்களுக்கு மேற்கண்ட நபர்களைக் குறித்து எந்த வித்தியாச உணர்வும் இல்லை. இவை எதுவும் அவர்களுக்கு மனதை நெருடும் விஷயமாக இல்லை. தேவ ஊழியர் களிடம் உண்மையைக் காண முடியாத போதும், பரிசுத்த அடையாளங்களைக் காண முடியாத போதும், சத்தியத்திற் கேற்ற வாழ்க்கை முறையைக் காண இயலாதபோதும், உண்மையான கிறிஸ் தவனுக்கு அது ஒரு பெரிய குறைவாகத் தெரிய வேண்டும். இது என்ன என்ற கேள்வி அவனுக்குள் எழவேண்டும். ஆனால், அப்படி எதுவும் இல்லை யென்றால் ஆவிக்குரிய சூடு சொரணை அவர்களிடம் இல்லை என்பதே பொருள்.

மிகவும் அழுக்கடைந்த உடைக ளோடும், மோசமான துர்வாசனை யோடும் காணப்படுகின்ற ஒரு மனித னுக்கு அருகில் போய், ஒருவர் சாதார ணமாக போய் உட்கார்ந்தால் என்ன அர்த் தம்? இந்த மனிதனுக்கு அழுக்கையோ, துர்வாசனையையோ, அருவருப்பாக உணருகின்ற உணர்ச்சி இல்லை. அவ னுக்கு அழுக்கு நாற்றம் எல்லாம் ஒரு பிரச்சினையாக இல்லை என்று அர்த்தம்.

இன்று சில அல்ட்ரா மாடர்ன் சுவி சேஷகர்களும், பாஸ்டர்களும் சினி மாக்காரர்களை போலவும், ராக் மியூசிக் கலைஞர்களைப் போலவும், கிளப்புகளில் ஆடுகிறவர்களைப் போல உடுத்திக் கொண்டு வருகின்றார்கள். இவர்கள் கர்த்தரை ஆராதிப்பதாகப் பொய்த் தோற்றம் கொடுத்து விட்டு பாப் டான் சர்களைப் போலவும், ராக் டான்சர்களைப் போலவும் ஆட்டம் போட்டுச் சபைக் களங் களை பொழுதுபோக்கு நிகழ்ச்சி மையங் களாக்குகிறார்கள். இவர்கள் ஆடுகின்ற ஆட்டங்களும் இவர்கள் போடுகின்ற கிளப் ரகமான கூச்சல் கும்மாளங்களும் கிறிஸ் தவரல்லாதர்களைக் கூட முகஞ்சுளிக்க வைக்கிறது.

பரிசுத்தமாக வாழ்ந்து காட்டி சாட்சியாயிருக்க இயேசு அழைத்தார். இவர்களோ இயேசுவுக்காக நாங்கள் ஆடிக்காட்டுகிறோம். ஆரவாரம் செய்து காட்டுகிறோம் என்று கூறி சத்தியம் அறியாதவர்களை வஞ்சிக்கின்றார்கள். இவர்களை இவ்விதம் ரிகார்ட் டான் சுகாரர்களைப் போல ஆடிக்காட்டி தம்மை மகிமைப்படுத்த இயேசு எங்காவது சொன் னாரா? அப்போஸ்தலர்களோ, ஆதி தேவ ஊழியர்களோ எங்காவது இந்த கூத்தாடி சந்ததியினரைப் போல உடலை உலுக்கிக் காட்டி தேவனை மகிமைப்படுத்தினார் களா? இந்த ஆவிக்குரிய தரமற்ற ஆட்டக் காரர்களைப் போல எங்காவது தேவ பணியாளர்கள் ஆடிக் காட்டி ஆண்டவரை மகிமைப்படுத்துகின்றோம் என்று சொன்னார்களா?

ஒருவரிடம் குறைந்த பட்ச பொது அறிவு அல்லது காமன் சென்ஸ் இருந் தாலே போதும். இந்த உலக ஆவியால் நடத்தப்படும் இவ்வித ஊழியர்களின்

போலி ஆராதனை கூட்டங்கள் மாய் மாலத்தின் உச்சகட்டம் என்பது புரிந்து விடும். ஆனால், ஆவியால் நிரம்பினதாக நம்புகின்ற இன்றைய பல கிறிஸ்தவர் களுக்கு இவை எதுவும் விகற்பமாகவோ/ முரண்பாடாகவோ தெரியவில்லை. ஏனென்றால், சத்தியம் அறியாத போலி கிறிஸ்தவர்களிடம் அந்த ஆவிக்குரிய சூடு சொரணையை எதிர்பார்க்க முடியாது.

## சத்திய ஆவி இல்லை

ஒரு நவீனப் போதகர் சபை ஆரா தனையில் விசில் அடித்தால் சபை வள ரும், விசில் அடித்து ஆராதிக்க பழகிக் கொண்டால் பணம் பெருகும், விசிலடித்து ஆராதிக்காததால்தான் சபையில் விசு வாசிகள் பெருகவில்லை என்றெல்லாம் பிரசங்கிக்கும் ஒரு வீடியோ கிளிப்பிங்கை பார்க்க நேர்ந்தது. இன்னொரு போதகர் நடனம் ஆடுவது 40 நாள் உபவாசத்தை விட வல்லமையானது என்று பிர சங்கிப்பதைக் கேட்க நேர்ந்தது. இது போன்ற அருவருப்பான போதனைக ளைக் கேட்க நேரிடும் எத்தனை பேருக்கு இவை ஒரு உறுத்தலைத் தருகின்றது? இது போன்ற மட்டரகமான விஷயங் களைப் பேசும் போதகர்களை அருவருப்பாக உணர எத்தனை பேரால் முடிகிறது?

இதுபோன்ற சகதி ரகமான பொய்ப் போதனைகளோடு வருகின்ற போதகர் களைக் குறித்து நமக்கொரு அதிருப் தியும் வருத்தமும் ஏற்படாவிட்டால், ஆவிக் குரிய உணர்ச்சி மண்டலம் மரத்துப் போய்விட்டு என்றுதான் அர்த்தம். தேவனை அறிந்திருக்கிறோம் என்று கூறியும் தங்கள் கிரியைகளினாலே மறு தலிக்கின்றவர்களை அப்போஸ்தல னாகிய பவுல் அருவருக்கப்படத்தக்கவர் கள் என்றான். (தீத்து 1:16)

பல கிறிஸ்தவர்கள் தேவ ஊழியர் கள் என்று அறியப்படுகிறவர்களிடம் சத்தியத்திற்கு எதிரான எத்தனை முரண் பாடான செயல்களும் நடத்தைகளும் இருந்தாலும், அவர்களைக் கனப் படுத்தவும், அவர்களுக்குக் காணிக்கை கொடுக்கவும், அவர்களின் போலியான ஊழியங்களில் பங்கேற்கவும் பழகிப் போய்விட்டார்கள். இன்று கிருபையின் உபதேசம் என்ற போலித் தோற்றத்தைக் காண்பித்துக் கொண்ட பல ஊழியர்கள்

**“ அவர்களிடம் சத்திய ஆவி இல்லை. சத்திய ஆவி இல்லாததால் சத்தியமுரண் பாடுகளைக் குறித்து அவர்கள் உறுத்தல் அடையவில்லை. ”**

பரிசுத்தமாக வாழ்வதை தேவையற்றது போலவும், பாவம் செய்வதை தவறற்றதும் போலவும் காண்பிக்கின்றனர். பாவத்தைக் கண்டிக்கும் போதகர்களையும், பரிசுத் தத்தை வற்புறுத்துகின்ற போதகர் களையும் இந்தப் போலி கிருபை உப தேசிகள் பரிகாசம் செய்கின்றனர்.

வளமான வாழ்க்கை வாழ்வதே ஆவிக் குரிய வாழ்க்கை வாழ்வதாகும் என்று போதிக்கும் பல வளவாழ்வு பிர சங்கிகள், பண ஆசையையும், பொருளாசை யையும், ஆடம்பர ஆசையையும், பொழுது போக்கு இன்ப ஆசைகளையும் வெளி யரங்கமாக எந்தக் கூச்சமும் தயக்கமும் இல்லாமல் போதித்து வளர்க்கின்றார்கள். ஆனால், இப்படியெல்லாம் பொய்ப் போதனை செய்து ஜனங்களை சத்தி யத்தை விட்டு இடற வைக்கின்றவர்களை, அனேகர் சந்தோஷத்தோடு பொறுத்துக் கொள்கின்றனர்.

இன்று கள்ளப் போதகர்களையும், பொய்த் தீர்க்கதரிசிகளையும், பொய்யான தரிசனம் காண்கின்றவர்களையும், கட்டுக் கதையாளர்களையும், ஆடம்பரவாதி களையும், நடன வெறியர்களையும், பழைய ஏற்பாட்டுப் பிரமாணங்களின்படி தசமபாகம் கேட்கின்றவர்களையும், ஜெப வியாபாரம் செய்கின்றவர்களையும், வஞ் சக ஆவியின் வல்லமையில் ஜனங்களை விழ வைக்கின்றவர்களையும், ஜனங் களின் வருவாயில் பங்கேற்கும் பங்காளர் திட்டங்களை கண்டுபிடித்தவர்களையும் ஏராளமான கிறிஸ்தவர்கள் இருகரம் கூப்பி ஏற்கின்றார்கள்.

காரணம் என்ன? சத்திய நுண் ணுணர்வு இல்லை. ஆவிக்குரிய சூடு சொரணைத்தன்மை இல்லை. பரிசுத்தப் பார்வை இல்லை. எது சரி, எது தவறு என பகுத்தறியும் திறன் இல்லை. சரியற்ற வைகளை அருவருப்பாக உணரும் சத்தியம் சார்ந்த ஆவிக்குரிய உணர்ச்சி இல்லை. (தீத்து-1:16) ஏனென்றால், அவர்களிடம் சத்திய ஆவி இல்லை. சத்திய ஆவி இல்லாததால் சத்திய முரண் பாடுகளைக் குறித்து அவர்கள் உறுத்தல் அடையவில்லை. உண்மையான இரட்சிப்பின் அனுபவமும், மறுபிறப்பின் அனுபவமும், சத்திய ஆவி செயல்படும் அனுபவமும், இல்லாமல் ஒரு போலி யான கிறிஸ்தவ மார்க்க அனுபவத்தில் இருப்பதால், தேவனுடைய சத்தியத்திற்கு எதிரான காரியங்கள் அவர்களை வைராக் கியப்படுத்தவோ, விசனப்படுத்தவோ, வருத்தப்படுத்தவோ இல்லை





# நான் ஏன் பிறரை மன்னிக்க வேண்டும்?

"நாம் பிறரை மன்னிப்பதின் நோக்கம் மன்னியாமை என்ற சுமையின் அழுத்தத்திலிருந்து விடுதலை அடைவதற்காக. நாம் உறவுகளையும் நல்ல ஐக்கியங்களையும் இழந்துவிடாமல் தக்க வைக்கவே பிறரை மன்னிக்கின்றோம். நாம் தேவ கோபத்தைத் தவிர்க்கவும், தேவனைப் பிரியப்படுத்தவுமே பிறரை மன்னிக்கின்றோம். எனவே, பிறர் மன்னிப்பை விரும்பினாலும் விரும்பாவிட் டாலும், அவர்களை நாம் மனதிற்குள் மன்னித்து விடவேண்டும்."

நான் எத்தனை தரம் மன்னிக்க வேண்டும்? ஏழு தரம் மட்டுமோ என்று பேதுரு இயேசுவிடம் கேட்டான். அதற்கு இயேசு ஏழு தரம் மாத்திரம் அல்ல. ஏழெ ழுபது தரம் மட்டும் என்று பதிலளித்தார். (மத்தேயு 18:21) அதாவது பிறரை மன் னிப்பதற்கு எல்லை எதுவும் விதிக்க கூடாது என்ற அர்த்தத்தில் கூறினார். பிறரை மன்னிப்பது என்பது எந்த நேரத் திலும் நம்மிடம் செயல்பட வேண்டிய ஒரு பண்பு

நிலையாக இருக்க வேண்டும்.

ஏன் நாம் பிறரை மன்னிக்க வேண்டும் என்ற கேள்விக்கு மூன்று முக்கியமான காரணங்களைச் சொல்லலாம்.

## பிறரை மன்னியாமை ஒரு சுமை

பிறர் செய்த தவறுகளும், குற்றங்களும், அநீதிகளும், சரியற்ற செயல்களும் நம்முடைய மனதைப் பாதிக்கின்றன. அப்போது அவர்களுக் கெதிரான ஒரு மனநிலை நமக்கு ஏற்படுகிறது. அதனால் அவர்களை நேசிக்கவோ மதிக்கவோ அவர்களைச் சாதாரணமாகப் பார்க்கவோ முடியவில்லை. அவர்கள் செய்தவைகளைக் குறித்த நினைவுகளும், அவர்கள் பேசின வார்த்தைகளைக் குறித்த நினைவுகளும், அவர்களைக் குறித்த ஒரு கசந்ததும், கடினமானதுமான ஓர் மனநிலையை உருவாக்குகிறது. இவ்விதமான ஓர் மன நிலை நம்மால் அல்ல. அவர்களின் தவறான மன நிலையின் விளைவாக நமக்குள் ஏற்பட்டிருக்கிறது.

நமக்குள் ஏற்பட்ட கசப்பும், கோபமும், வருத்தமும், அதிருப்தியும் நியாயமானவையே ஆயினும், இவைகள் நம்முடைய மனதிற்கு அசௌகரியத்தையும், அழுத்தத்தையும், தெளிவின்மையையும், கோபத்தையும் ஏற்படுத்தும் தன்மையுடையவை. இவை நமக்கு அதிகமான சுமைகளாக மாறுகிறது. இவை இப்படித்தான் இவர்களைக் குறித்து நாம் எதிர்மறையாய் உணர வேண்டும் என்று நமக்குள் சிந்திக்கத் தூண்டினாலும், அவை நமக்குத் தீமை ஏற்படுத்தும் சுமைகளே. இந்தக் கசப்புணர்வுகள் என்ற சுமை, நம் முடைய சமாதானத்திற்கும் சந்தோஷத்திற்கும் இலகுவான மன நிலைக்கும் எதிரிகள்

*“மன்னியாத ஒரு மன நிலை உறவு களைப் பயன் படுத்தவிடாமல் தடுக்கிறது. மன்னியாத ஓர் மனநிலை நமக்கு மிகவும் அவசியமான நல்ல சில ஐக்கியங்களை விட்டு விலகுவதற்கு நம்மைக் கட்டாயப் படுத்துகிறது.”*



இப்படி கசப்பாகவும், கோபமாகவும், பிறரைக் குறித்து, சிந்திப்பது நியாயம் தான் என்றாலும் இவைகள் பெரிய சுமைகளாக மாறி நமக்கு எதிராகச் செயல்படுவதால் இவற்றால் நமக்கு பாதகமே அதிகம். பிறரைக் குறித்து நன்றாக நினைக்கிற வர்களின் மனநிலை அழுத்தங்களின்றி நல்ல ஆரோக்கிய மாயிருக்கும். பிறரைக் குறித்த வருத்த உணர்வோடும் கசந்த உணர்வோடும், இருப்பவர்களின் மன நிலை, அதிகமான மன அழுத்தம் பெற்று விடுதலையற்ற தாயிருக்கும். இதனால் நமக்கு மனரீதியாகவும், பக்தி ரீதியாகவும், உடல் ரீதியாகவும் பல மோசமான பாதிப்புகள் ஏற்படும்.

எனவே, இந்த மன்னியாத ஒரு மன நிலை நமக்குப் பாதகத்தை ஏற்படுத்துவதால், மன்னிப்பு ஒன்றே அதனைத் தவிர்க்கின்ற வழி. மன்னியாமையால் நம்முடைய வாழ்க்கையில் பல தீங்குகளே வருவதற்கு வாய்ப்புள்ளதால், மன்னிக்கும் ஒரு பண்பினால் அதனை அகற்ற வேண்டியது மிகவும் அவசியமான ஒன்று. உங்கள் இருதயத்திலே கசப்பான வைராக்கியத்தையும் விரோதத்தையும் வைத்தீர்களானால், நீங்கள் பெருமை பாராட்டாதிருங்கள் என்று வேதம் சொல்கிறது. (யாக்கோபு 3:14)

## பிறரை மன்னியாமை உறவுகளை நஷ்டப்படுத்துகிறது

சில உறவுகள் நமக்கு மிகவும் நல்லவை. சில உறவுகள் நமக்கு மிகவும் அவசியமானவை. சில உறவுகளினால் நமக்கு நல்ல பல அனுகூலங்கள் உண்டு. ஆனால், உறவுகளுக்கிடையிலும் நட்புகளுக்கிடையிலும் வருத்தப்படுத்துகின்ற அல்லது கோபப்படுத்துகின்ற அல்லது அதிருப்தி ஏற்படுத்துகின்ற ஏதாவது ஒன்று நிகழ்ந்து விடுகிறது. ஒரு தவறை அல்லது குறையை அல்லது விரும்பஇயலாத ஒரு செயலைக் குறித்த சிந்தனை அந்த உறவை இழப்பதற்கு வழி வகுத்து விடுகிறது. மனதைப் புண்படுத்தின அல்லது கோபப்படுத்தின மற்றவரின் செயலை மன்னியாத ஒரு மன நிலை மற்றவரின் நல்ல உறவாலும் ஐக்கியத்தாலும் வருகின்ற நல்ல பல நன்மைகளை நஷ்டப்படுத்திவிடுகிறது. ஆம். மன்னியாமை என்ற ஒன்றால் நமக்குப் பல நன்மைகளை ஏற்படுத்தும் நல்ல சில ஐக்கியங்களும் நட்புகளும் நமக்குத் தூரமாகிவிடுகின்றன.



*“மற்றவர்களைக் குறித்து நமக்குள் ஏற்பட்ட கசப்பையும், கோபத்தையும், வெறுப்பையும் நாம் மனதளவில் விட்டுவிட்டு, அவர்களைக் குறித்த எதிர்மறையான மனநிலையிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளுதலே மனதால் மன்னிக்கும் செயல்.”*

மன்னியாத ஒரு மனநிலை உறவுகளைப் பயன்படுத்தவிடாமல் தடுக்கிறது. மன்னியாத ஓர் மனநிலை நமக்கு மிகவும் அவசியமான நல்ல சில ஐக்கியங்களை விட்டு விலகுவதற்கு நம்மைக் கட்டாயப் படுத்துகிறது. சிலர் பல விதங்களில் உதவியாயிருக்கும் நல்ல நட்புகளை இழக்கின்றனர். சிலர் வாழ்விற்கு மிகவும் தேவையான கணவன் மனைவி உறவை இழந்து காலம் முழுதும் கஷ்டப்படுகின்றனர். காரணம் என்ன? ஒரு தவறை அல்லது குற்றத்தை மன்னிக்க விரும்பாத ஒரு மனநிலை. இப்படி நடந்து கொண்ட ஒருவரை இப்படிப் பேசின ஒருவரை ஏன் மன்னிக்க வேண்டும்? என்ற ஓர் வைராக்கிய உணர்வு அநேக நல்ல விஷயங்களைக் கொண்ட உறவுகளை அசட்டை செய்யும்படி மனதைக் கடினமாக்கிவிடுகிறது.

மற்றவரின் ஏதோ ஒரு சுபாவம் அல்லது செயல் நம்மைக் காயப்படுத்தியிருப்பது உண்மையாயிருக்கும். ஆனால், மற்றவரின் எத்தனையோ பிற விஷயங்கள் நமக்கு பெரிய நன்மைகளைச் செய்கிறது. மற்றவர்களின் உறவும் ஐக்கியமும் நமக்கு எத்தனையோ விதங்களில் பயனுள்ளதாயும், தேவையுள்ளதாயும் இருக்கிறது. ஆனால், மன்னியாமை என்ற ஒரு குணம் அவ்வித நன்மைகளை அலட்சியம் செய்துவிடுகிறது.

## பிறரை மன்னியாமை தேவனைக் கோபப்படுத்துகிறது

மூன்றாவதாக மன்னியாமை என்பது தேவன் வெறுக்கின்ற ஒரு குணம். மன்னியாத ஒரு மனநிலை தேவ கோபத்தை வரவழைக்கின்றது. தனக்கு கடன் கொடுத்தவனிடமிருந்து விடுதலை பெற்ற ஒருவன் தன்னிடம் கடன்பட்டவனிடம் அதே விதமாக நடந்துகொள்ளவில்லை. அதைப் பார்த்து மிகப்பெரிய கடன் தொகையிலிருந்து விடுவித்த மனிதன் அவன் மேல் கோபமடைந்தான். இந்த உவமையைச் சொன்ன இயேசு, நீங்களும் அவனவன் தன் தன் சகோதரன் செய்த தப்பிதங்களை மனப்பூர்வமாய் மன்னியாமற் போனால் என் பரம பிதாவும் உங்களுக்கு இப்படியே செய்வார் என்றார். (மத்தேயு 18:35)

நாம் ஏன் ஒருவருக்கொருவர் மன்னிக்க வேண்டும்? அது தேவனுடைய விருப்பம். நாம் ஏன் பிறரை மன்னிக்க வேண்டும்? மன்னியாத மனநிலை தேவ கோபத்தை வரவழைக்கின்றது. ஒருவர் பேரில் ஒருவருக்குக் குறைபாடு உண்டானால், கிறிஸ்து உங்களுக்கு மன்னித்தது போல ஒருவருக்கொருவர் மன்னியுங்கள் என்று பவுல் கொலோசெயருக்கு எழுதினான். (கொலோசெயர் 3:13)

நாம் செய்த பாவத்தையெல்லாம் கர்த்தர் மன்னித்திருக்கின்ற படியால் நாம் ஒருவருக்கொருவர் மன்னிக்க வேண்டியது தேவனுடைய பார்வையில் மிகவும் அவசியமாக உள்ளது. நாம் பாவமன்னிப் பாகிய மீட்பைப் பெறாமல் போவதும் பாவம். (எபேசியர் 1:7) பிறருடைய தவறுகளை நாம் மன்னிக்காமல் போவதும் பாவம்.

பிறரை மன்னியாத மனதிற்குள் தேவன் தம்முடைய அன்பையோ, அமைதியையோ, சந்தோஷத்தையோ வைக்க முடியாது. பிறரை மன்னிக்க வேண்டிய ஆவிக்குரிய பொறுப்பை உணராதவர்கள் வழியாக தேவன் தம்முடைய விருப்பங்களை நிறைவேற்ற முடியாது. மன்னியாத இருதயத்தின் வாயிலாக தேவன் செயல்பட முடியாததால் தேவன் அவர்கள் மேல் கோபமடைகின்றார்.

## ஏன் மன்னிக்க இயல வில்லை?

மன்னியாத ஒரு குணம் நல்லதல்ல என் பது பலருக்குத் தெரியும். பிறரை மன்னிக்க வேண்டும் என்ற வாஞ்சை பலரிடம் உண்டு. ஆயினும், பிறரை மன்னித்தல் என்பது பலருக்கு மிகவும் கடினமான விஷயமே. தேவனிடம் அன்பாயிருக்கவும், கர்த்தருக்கு மிக உற்சாகமாக ஆராதனை செலுத்தவும் பலர் மிகவும் வாஞ்சையாயிருப்பார்கள். ஆயினும், தங்களுக்குத் தீங்கு செய்தவர் களையும், தங்களைப் புண்படுத்தியவர் களையும் மன்னித்து விடுதல் என்பது அவர் களுக்குக் கடினமான காரியங்களே. சில காரணங்களைப் பார்ப்போம்.

## மன்னிப்பை விரும்பாதவர் களை மன்னிப்பது எப்படி?

சிலர் தாங்கள் செய்த தவறையோ பிழையையோ உணருவதில்லை. ஏதாவது ஒரு விதத்தில் தாங்கள் பேசி யதும், செய் ததும், நடந்து கொண்டதும் தவறல்ல என்று நியாயப்படுத்துவதற்கு அதிகச் சிரமம் எடுப்பவர்கள். சிலர் தாங் கள் தவறாக நடந்து கொண்டதையும், தப்பிதமாகச் செயல்பட்டதையும் உணர்ந் தாலும், அதற்காக மனம் வருந்தவோ, தவறை அறிக்கை செய்யவோ முன் வரமாட்டார்கள். இப்படிப்பட்டவர்களின் தவறுகளையும் குற்றங்களையும் மன் னிப்பது எப்படி? மன்னிப்பை அசட்டை





தேவ பிரசன்னத்தோடு வாழ்வதை தனக்கு மிக மிக அவசியமான ஒன்றாக உணருகின்ற மனிதன், அந்த பிரசன்னத் திற்காக யாரை மன்னிக்க வேண்டுமோ அவர்களை மன்னிக்கின்றான். தேவ பிரசன்னத்தோடு வாழ வேண்டுமே என்ற ஆர்வம் அவனை பிறரைக் குறித்த கசப்பு, கோபம், வெறுப்பு யாவற்றிலிருந்தும் விலகி வர வழிநடத்துகின்றது.

செய்கின்றவர்களையும், தவறுக்கு மனம் வருந்தாதவர்களையும் மன்னிப்பது எப்படி?

நாம் பிறரை மன்னிப்பதின் நோக்கம் மன்னியாமை என்ற சுமையின் அழுத் தத்திலிருந்து விடுதலை அடைவதற்காக. நாம் உறவுகளையும் நல்ல ஐக்கியங் களையும் இழந்துவிடாமல் தக்க வைக் கவே பிறரை மன்னிக்கின்றோம். நாம் தேவ கோபத்தைத் தவிர்க்கவும், தேவனைப் பிரியப்படுத்தவுமே பிறரை மன்னிக்கின்றோம். எனவே, பிறர் மன்னிப்பை விரும்பினாலும் விரும்பா விட் டாலும், அவர்களை நாம் மனதிற்குள் மன்னித்து விடவேண்டும். ஏனென்றால், மன்னிப்புப் பெற வேண்டிய தேவையை பிறரை உணராமல் போனாலும், பிறரை மன்னிக்க வேண்டிய தேவையை நாம் உணர்ந்து செயல்படவேண்டும். மற்ற வர்களைக் குறித்து நமக்குள் ஏற்பட்ட கசப்பையும், கோபத்தையும், வெறுப் பையும் நாம் மனதளவில் விட்டுவிட்டு, அவர்களைக் குறித்த எதிர்மறையான மனநிலையிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளுதலே மனதால் மன்னிக்கும் செயல்.

## மன்னிக்கும் மனநிலை இன்மை

சிலருக்கு பிறர் செய்த தவறுகளின் விளைவாக ஏற்பட்ட கோபமும், வெறுப்பும் விரைவில் கரைந்துவிடும். அவர்கள் தவறு செய்த நேரத்தில் மனதில் ஏற்பட்ட காயமோ, நோவோ, வருத்தமோ மனதில் இப்போது இல்லை. எனவே பழிக்குப் பழியாக எதையாவது செய்து தவறு செய்தவர்களுக்கு வெறுப்பூட்ட வேண்டும் என்ற ஆசையெல்லாம் இப்போது இல்லை. ஆயினும், மற்றவர்கள் செய்த தவறுகளை மனதில் வைத்து அவர் களோடு எந்த தொடர்பும் தேவையில்லை என்பது போல அமைதியாக இருப்பார்கள். அவர்களை மன்னிக்க வேண்டும் என்றோ, அவர்கள் செய்தவைகளை மறக்க வேண்டும் என்றோ இவர்கள் நினைக்கமாட்டார்கள். மன்னிக்க விரும்பு கின்ற ஒரு ஆர்வமோ விருப்பமோ இவர் களுக்கில்லை.

இவர்கள் மற்றவர்கள் செய்தவை களை மறந்துவிட்டது போலவும், அவற்றை யெல்லாம் யோசிப்பது இல்லை என்பது போலவும் காட்டிக் கொள்வார்கள். ஆயினும், மனதில் அவர்களைக் குறித்த எதிர்மறையான எண்ணங்களை விட்டு விட மனதில்லாதிருப்பார்கள். ஏதாவது ஒரு சூழலில் அவர்களைக் குறித்த பழைய நினைவுகள் வரும்போது, மறுபடியும் அவர்களைக் குறித்த கசப்பான உணர் வையும், வைராக்கிய உணர்வையும் மனதில் தக்க வைத்துக் கொண்டிருப் பார்கள். இவர்களுக்கு மற்றவர்களை மன்னிக்க வேண்டும் மறக்க வேண்டும், என்பதைவிட, தங்களின் சுய உணர்வே பெரிய விஷயமாயிருக்கும்.

## மன்னிக்க முடியவில்லை

சிலர் மன்னிப்பு தொடர்பான போத னைகளைக் கேட்கும் போது, தங்களுக்குத் தவறு இழைத்தவர்கள் மேல் உள்ள கோபத்தை விட்டுவிட்டு அவர்களை மன்னித்து விடவேண்டும் என்று விரும்பு வார்கள். ஆனால், அவர்களால் அது முடிவதில்லை. எவ்வளவுதான் மனதை ஆயத்தப்படுத்தி இனி அவர்களைக் குறித்த வெறுப்பை விட்டுவிட வேண்டும் என்று எண்ணினாலும், அது அவர் களுக்கு இயன்ற விஷயமாயிராது. சில நேரம் மன்னித்து விட்டதாக எண்ணி னாலும், மறுநேரம் அந்தப் பழைய கோபமும் ஆத்திரமும் அப்படியே இருக்கும். இப்படிப்பட்டவர்களை எப்படி

மன்னிக்க முடியும் என்று சிந்திப்பார்கள். இவர்களை மன்னித்து விட்டால் அவர்கள் செய்ததை நாம் சாதாரணமாக எடுத்துக் கொண்டதாக ஆகிவிடாதா என்று யோசிப் பார்கள். ஆம். இவர்கள் பிறரை மன்னிக்க விரும்பினாலும் அதில் வெற்றி பெற மாட்டார்கள்.

## தேவ ஐக்கிய வாழ்க்கை

தினமும் நாம் பிறரை மன்னித்து வாழ வேண்டிய தேவை உள்ளது. தினமும் நாம் பிறரை மன்னிக்கும் அனுபவத்தோடு வாழ வேண்டுமானால், தினமும் தேவ ஐக்கியத்தில் வாழ வேண்டிய அவசியம் உண்டு. அனுதின வாழ்வில் தேவ ஐக்கியத்தோடு வாழ்வதை பிரதான நோக்கமாகக் கொண்டு வாழ்கின்ற மனிதன் பிறரை மன்னித்து வாழ்வதில் வெற்றியடைகின்றான். பிறரை மன்னி யாத மனநிலை உடைய எவரும் தேவ ஐக்கியத்தோடு வாழ்கின்ற அனுபவத் தைப் பெற முடியாது. தேவ பிரசன்னத் தோடு வாழ்வதை தனக்கு மிக மிக அவசியமான ஒன்றாக உணருகின்ற மனிதன், அந்த பிரசன்னத்திற்காக யாரை மன்னிக்க வேண்டுமோ அவர்களை மன்னிக்கின்றான். தேவ பிரசன்னத் தோடு வாழ வேண்டுமே என்ற ஆர்வம் அவனை பிறரைக் குறித்த கசப்பு, கோபம், வெறுப்பு யாவற்றிலிருந்தும் விலகி வர வழிநடத்து கின்றது. தேவ ஐக்கியத்தில் வாழ்கின்ற ஆசையை தினமும் நிறைவேற்ற அவன் மனிதர்களை மன்னிக்கும் மனநிலையை விரும்பி தேடி அதில் வெற்றி அடைகிறான்

NEWS

## வெளிநாட்டு செய்திகள்

- மியான்மர் நாட்டில் சமீபத்தில் இராணுவம் புரட்சியில் ஈடுபட்டு ஆட்சியை கைப்பற்றியது. இதற்கு அந்த நாட்டில் பெரிய அளவில் எதிர்ப்பு தோன்றியுள்ளது. இராணுவத்தின் எச்சரிக்கையை மீறி பொதுமக்கள் தொடர்ந்து போராடி வருகின்றனர். போராட்டகாரர்களை சமாளிக்க இராணுவம் கடுமையான நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. பொதுமக்கள் பலர் இராணுவ நடவடிக்கைகளால் உயிரிழந்துள்ளனர். மியான்மர் நாட்டின் இராணுவ நடவடிக்கைகளுக்கு ஐ.நா சபை கடுமையான கண்டனங்களை தெரிவித்து வருகின்றது.

- ஈராக்கில் தற்போது 5000 அமெரிக்க இராணுவ வீரர்கள் மட்டுமே உள்ளனர். இவர்கள் ஈரானின் ஆதரவோடு தாக்குதல் நடத்தும் பயங்கரவாத குழுக்களோடு போராடி வருகின்றனர். அமெரிக்க வீரர்களின் நடவடிக்கைகளுக்கு எதிராக தொடர்ந்து ராக்கெட் தாக்குதல் நடத்தப்படுகிறது. இதற்கு அமெரிக்கா கடுமையான கண்டனங்களை தெரிவித்ததோடு கடுமையான இராணுவ நடவடிக்கைகள் மேற்கொள்ளபடும் என்று எச்சரித்துள்ளது.

- ரஷ்ய அதிபர் விளாடிமிர் புடினை கடுமையாக விமர்சித்து வந்த ரஷ்ய எதிர்கட்சி தலைவர் அலெக்சி நவால்னி அமெரிக்க உளவுத்துறையுடன் செயல்படுவதாக புடின் குற்றஞ்சாட்டியிருந்தார். இந்நிலையில் அலெக்சி நவால்னிக்கு விஷம் கொடுக்க புதின் உத்தரவிட்டதாக சர்ச்சை ஒன்று எழுந்தது. இதைக் குறித்த கேள்வி ஒன்றிற்கு பதிலளித்த அமெரிக்க அதிபர் ஜோ பைடன் தான் அப்படி நம்புவதாக கூறியுள்ளார். தற்போது அமெரிக்க அதிபருக்கும் ரஷ்ய அதிபருக்கும் இடையில் கடுமையான மோதல் ஏற்பட்டுள்ளது.



# இழந்து போன தேவ உறவை திரும்பப் பெற்றீர்களா?

**" சிலர் பக்தியாக வாழ்வதில் மிகவும் ஆழமாய்ச் சென்ற போதிலும்கூட மன அமைதியற்றவர்களாகவும், மனமகிழ்ச்சியற்றவர்களாகவும், மனதைரியம் அற்றவர்களாகவும் இருப்பார்கள். ஏனென்றால், அவர்களின் பக்தி தேவ உறவில்லாத பக்தியாக உள்ளது."**

பல கிறிஸ்தவர்கள் திருச்சபைகளுக்குச் சென்ற போதிலும், அவர்களுக்குத் தங்களின் பக்தியின் பின்னால் எந்தத் தேடலும் எதிர்பார்ப்பும் இல்லை. அவர்கள் எதையும் தேடியோ எதிர்பார்த்தோ கிறிஸ்தவர்களாக இருப்பதில்லை. அவர்கள் கிறிஸ்தவர்களாயிருப்பது தேவனை மகிமைப்படுத்தும் நோக்கத்தில் அல்ல. அவர்கள் ஆலயங்கள் என்று அழைக்கப்படும் இடங்களுக்குச் செல்வது, ஒரு விசேஷ நோக்கத்தின் அடிப்படையில் அல்ல. நீண்ட காலமாகப் பழகிப் போன ஒரு பழக்கத்தின் விளைவாகவே அவர்கள் கோயில்களுக்குச் செல்கின்றனர்.

## இழந்தது என்ன?

ஆனால், கிறிஸ்தவ பக்தி என்பது, மிக மிக முக்கியமான சில தேவைகளை சந்திப்பதற்காகவே. அறிவு, ஞானம், திறமை, புத்தி, முயற்சி ஆகியவற்றால் பெற இயலாத சில மிக முக்கியமான மனிதத் தேவைகளைப் பெற்றுக் கொள் வதற்காகவே கிறிஸ்தவ பக்தி தேவைப் படுகிறது. முக்கியமாக எல்லா மனிதர் களுமே இயற்கையிலேயே ஒன்றை இழந்தவர்களாகவே உள்ளனர். நமக்கு மிக மிக அவசியமான ஒன்றை நாம் இழந்திருக்கின்றோம். அதனை நாமோ நம்முடைய முற்பிதாக்களோ வேண்டு மென்று இழக்க வில்லை. ஆதி தகப்ப னாகிய ஆதாம் ஒன்றை இழந்ததின் விளைவாக, ஆதாமின் சந்ததியாகிய நாம் யாவரும் நமக்கு மிகவும் அவசியமான ஒன்றை இழந்தவர்களாகவே உள்ளோம்.

அது என்ன? அதுதான் தேவ உறவு.

ஆதாம் இழந்தது நிலத்தையோ, சொத்தையோ, அறிவையோ, ஞானத் தையோ , திறமையையோ அல்ல. ஆதாம் தன் பாவத்தின் விளைவாக தேவ உறவை இழந்தான். மனிதன், மனிதன் என்ற முழு தகுதியோடும், பூரணத்தோடும் வாழ் வதற்கு மிகவும் தேவையாயிருந்த தேவ உறவுதான் ஆதாமினால் ஆதியில் இழக்கப்பட்டது. ஆதாம் தேவனால் துரத்தப்பட்டபோது அவன் இழந்திருந்தது தேவ உறவைத்தான். (ஆதியாகமம் 3:24) இந்த தேவ உறவை திருப்பித்தருவதைக் குறித்து பேசுவதுதான் கிறிஸ்தவப் போதனைகள்.

எனவே, ஒருவர் கிறிஸ்தவராகயிருப் பது என்பது, ஏதோ ஒரு தேவ பக்தியில் இருக்க வேண்டும் என்பது அல்ல. அவர் தான் இயற்கையாக இழந்து போயிருக் கின்ற மிக மிக அவசியமான ஒன்றைத் திருப்பிப் பெறுவதற்காகவே கிறிஸ்த

**“நாம் இயற்கையாகவே இழந்து போயிருக்கும் தேவ உறவைப் பெற்றுக் கொள்ள முதல் கவனம் செலுத்தாமல், எவ்வளவு பக்தியாய்ச் செயல்பட்டாலும் பயனில்லை.”**





**"தேவ உறவின் ஆளுகை இல்லாத மனிதனை வெறுப்பும், கசப்பும், கோபமும், வைராக்கியமும் எளிதாக ஆளுகை செய்யும்."**

வராக வேண்டும். தன்னிடம் மிகவும் அவசியமாக இருக்க வேண்டிய தேவ உறவைத் தேடிப் பெறும் உணர்வு இல்லாமல், ஒரு பக்திக்காக மட்டும் கிறிஸ்தவ மார்க்கத்தில் இருந்தால், அது முற்றிலும் பிரயோஜனமற்ற ஒரு அனுபவம்.

சிலர் ஆராதனை, ஜெபம், கிறிஸ்தவ ஒழுங்கு முறைகள் என ஒரு பக்தி அனுபவத்தைப் பெற்றிருந்த போதிலும், அவர்கள் தேவ உறவைப் பெறவில்லை. சிலர், சில தேவ நன்மைகளை ஏதாவது ஒரு சூழலில் பெற்றுக் கொண்டதாக நம்பிய போதிலும், அவர்கள் தங்களுக்கு மிக அவசியமான தேவ உறவைப் பெற்றுக் கொள்ளவில்லை. சிலர் திருச் சபை கூடுகைகளிலும், ஆராதனைக் கூடுகைகளிலும், ஜெபக்கூடுகைகளிலும், கலந்து வல்லமை அனுபவங்களைப் பெறுகின்றனர். தங்களிடம் அபிஷேகமும், ஆவியின் வல்லமையும் உடையதாகவும் அவர்கள் கூறினாலும், அவர்களிடம் தேவ உறவு இல்லை.

நாம் இயற்கையாகவே இழந்து போயிருக்கும் தேவ உறவைப் பெற்றுக் கொள்ள முதல் கவனம் செலுத்தாமல், எவ்வளவு பக்தியாய்ச் செயல்பட்டாலும் பயனில்லை. அநேகர் தங்களின் பக்தி நடவடிக்கைகளையே தேவ உறவைப் பெற்றதற்கான அனுபவமாக எண்ணி விடுகிறார்கள். தங்களின் தீவிர பக்தி நிலையைப் பார்த்து, அதனையே தேவ

உறவில் வாழும் அனுபவமாக எண்ணி விடுகின்றனர். நாம் இயற்கையாகவே இழந்து போன தேவ உறவை தேடிப் பெற்றுக் கொண்டோமா, இல்லையா என்பதை முதலாவது ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

நாம் நன்றாக ஆராதனை செய்யலாம். நாம் நன்றாகச் ஜெபம் செய்யலாம். நாம் நல்ல வேத அறிவை விரும்பி நாடலாம். நாம் வேத வார்த்தைகளை தினமும் படித்து அதன்படி செயல்பட முயற்சிக்கலாம். நாம் கர்த்தருக்கு ஊழியம் செய்யும் செயல்களில் தீவிரமாயிருக்கலாம். இவை எதுவும் நாம் இயற்கையாக இழந்து போன தேவ உறவை பெற்றுக் கொண்டதற்கான உறுதியான அடையாளங்கள் அல்ல. தேவ உறவை நாம் திரும்பப் பெற்றிருந்தால் அதற்குரிய விசேஷ அடையாளங்களை நம்மிடம் நாம் பார்க்க முடியும்.

## பாவ எதிர்ப்பு வலிமை

ஒரு மனிதன் தனக்கு மிகவும் அவசியமான தேவ உறவை திரும்பப் பெற்றிருந்தால், அவன் பாவத்தால் மேற்கொள்ளப்படும் ஒரு வாழ்க்கைக்கு விதிவிலக்காயிருப்பான். தேவ உறவைப் பெற்றுக் கொண்டவனை தவறான சிந்தனைகளோ, தவறான சுபாவங்களோ, தவறான செயல்களோ, தவறான பழக்க வழக்கங்களோ, தவறான ஆசைகளோ, தவறான உறவுகளோ மேற்கொள்ள இயலாது. மனித ஆற்றல்களும், முயற்சிகளும், பக்தி நாட்டங்களும், ஜெப தபங்களும் பாவத்தைச் ஜெயிக்கும் ஆற்றலைப் போதுமான அளவு கொண்டவை அல்ல. தேவ உறவைப் பெற்றுக்கொண்ட மனிதன் மட்டுமே பாவமானவற்றையும் அல்லது தேவனுடைய பார்வையில் சரியற்றவைகளாகத் தோன்றுகின்றவைகளையும் கீழ்ப்படுத்தி வெற்றிபெற முடியும். தேவ உறவைப் பெற்றவன் தேவ கிருபை பெற்றவன். தேவ கிருபை பெற்றவனை பாவம் மேற்கொள்ளாது என்று வேதம் சொல்கின்றது. (ரோமர் 6:14)

சிலர் நல்ல ஜெபப் பழக்கம் உடையவர்களே. சிலர் ஆவியில் நிரம்பும் அனுபவம் உடையவர்களே. சிலர் விசேஷ அபிஷேக அனுபவம் உடையவர்களாக நம்பப்படுகிறவர்களே. சிலர் மிகுந்த ஊழிய நடவடிக்கைகள் உடையவர்களே. ஆயினும், தனிப்பட்ட வாழ்க்கையில் தேவனுக்கு உகந்ததல்லாத விஷயங்களை அவர்கள் ஜெயிப்பதில்லை. பண ஆசையையோ, பொருளாசையையோ, உலகப் பிரகார ஆடம்பர ஆசைகளையோ அவர்களால் கட்டுப்படுத்தி வாழ இயலாது. எனவே, அவர்கள் ஆழமான ஆவிக்குரிய அனுபவம் உடையவர்கள் போல காணப்பட்டாலும், உண்மையில் இன்னும் தேவ உறவை வாழ்க்கையில் பெறாதவர்களே.

## மனிதர்களை நேசிக்க இயலாத மனநிலை

தேவ உறவை உடையவன் தேவ அன்பை உடையவன். (ரோமர் 5:5, 1யோவான் 4:19) தேவ அன்பை உடையவன் பிறர் மேல் ஏற்படும் விரோதம், வெறுப்பு, கசப்பு, கோபம், பொறாமை, அக்கறையற்ற மனநிலை போன்றவற்றை மேற்கொள்ள இயன்றவன். தேவ உறவின் விளைவான ஆற்றல் ஒரு மனிதனை வெறுப்பு, எரிச்சல், பொறாமை, வைராக்கியம் போன்ற கடுமையான மனநிலைகளிலிருந்து விடுவிக்கும் வல்லமை கொண்டவை. தேவ உறவுடன்

வாழ்ந்ததினாலேயே யோசேப்பு தன் சகோதரர்கள் செய்த அநீதிகளை எண்ணி வெறுப்புடன் வாழாமல், அவர்களைக் குறித்த அன்புணர்வுடன் வாழ முடிந்தது. (ஆதி 50:20)

சிலர் மிகவும் பாராட்டத்தக்க விதமான ஜெப அனுபவம் உடையவர்கள்தான். சிலர் மிக மிகச் சிறப்பாக ஆராதனை செய்யும் அனுபவம் உடையவர்கள். சிலர் மிக மிகத் தீவிரமாக கர்த்தருடைய காரி யங்களைக் கற்றுத்தேற இயன்றவர்களே. சிலர் மிக மிகச் சுறுசுறுப்போடும், கடுமை யான பிரயாசங்களோடும் இறைப்பணி செய்கின்றவர்களே. ஆயினும், சிலரைக் குறித்த கோபம் அப்படியே இருக்கும். சிலரைக் குறித்த வெறுப்பு விலகாமல் தொடரும். சிலரைக் குறித்த கசந்த மனநிலை மறையவே மறையாது. சிலரைக் குறித்த அவர்களின் பொறாமை வித்தியாசமான வடிவங்களில் செயல் படுவது நிற்காது.

ஏனென்றால், அவர்களிடம் இருப்ப தெல்லாம் பக்தி ஈடுபாடுகளேயன்றி, பரிசுத்த அனுபவங்கள் அல்ல. அவர்கள் இன்னும் தேவ உறவை வாழ்க்கையில் அடையாளம் கண்டு உறுதிப்படவில்லை. தேவ உறவின் ஆளுகை இல்லாத மனிதனை வெறுப்பும், கசப்பும், கோபமும், வைராக்கியமும் எளிதாக ஆளுகை செய்யும்.

## சமாதானம், சந்தோஷம், நம்பிக்கை

ஒரு மனிதனுடைய இருதயத்திற்கு மிக முக்கியமான சில தேவைகள் உண்டு. அவை சமாதானம், சந்தோஷம், நம் பிக்கை. சாதாரணமான சூழ்நிலைகளில்

**"நம்முடைய எந்தப் பக்திச் செயலையும் தேவ உறவின் அடையாளங்களாக எண்ணாமல், பாவ எதிர்ப்பு வலிமை, நற்குண ஆற்றல், தேவ சமாதான வாழ்க்கை ஆகியவற்றை அதனுடைய அடையாளங்களாக எண்ண வேண்டும்."**



இவை மனிதனிடம் காணப்பட்டாலும், சூழ்நிலைகள் மாறும்போது இவற்றை மனிதனால் தக்க வைத்து வாழ இய லாமல் போய்விடும். ஆனால், தேவ உறவைப் பெற்றுக் கொண்ட மனிதன், அந்த அனுபவத்தினால் தனக்குள் இவற்றை தக்க வைக்க இயன்றவனாக மாறிவிடுவான். வேறு எந்த ஆற்றல் களும் சூழ்நிலைகளும் இவற்றைத்தக்க வைக்க இயலாவிட்டாலும் தேவ உறவு என்ற ஒரே ஒரு பின்னணி இவற்றைத் தக்க வைக்கும்.

தேவ உறவை அனுபவிக்கும் இரு தயம் எந்தவிதமான எதிர்சூழ்நிலையிலும் சமாதானமிழந்தோ, சந்தோஷமிழந்தோ, நம்பிக்கையிழந்தோ போவதில்லை. (மத்தேயு 11:28, யோவான் 15:11, எபேசியர் 3:12) மனித இருதயத்திற்கு மிகவும் தேவையானவையாக சமாதானமும், சந்தோஷமும், நம்பிக்கையும் இருப்ப தால், தேவன் தம்முடைய நல்ல உறவின் வாயிலாக அவை யாவற்றையும் வழங்க வல்லவராயிருக்கின்றார்.

சிலர் பக்தியாக வாழ்வதில் மிகவும் ஆழமாய்ச் சென்ற போதிலும்கூட, மன அமைதியற்றவர்களாகவும், மன மகிழ்ச்சியற்றவர்களாகவும், மன தைரியம் அற்றவர்களாகவும் இருப்பார் கள். ஏனென்றால், அவர்களின் பக்தி தேவ உறவில்லாத பக்தியாக உள்ளது. தேவ உறவை உடையவன் எல்லா நிலைமை களின் நடுவிலும் மனரம்மியமா யிருப்பான். (பிலி 4:11)

## தேவ உறவைப் பெறுவது எப்படி?

தேவ உறவை ஆராதனைகளாலோ, உபவாசங்களாலோ, ஜெபங்களாலோ, காணிக்கைகளாலோ, சுய வெறுப்புச் செயல்களாலோ பெற முடியாது. தேவ உறவைப் பெறும் தகுதியில்லாத பாவிகள் நாம் என்ற உண்மையான நம்முடைய நிலைமையை உணர்ந்து, கர்த்தருக்கு நம்மை அர்ப்பணிக்க வேண்டும். நம்முடைய பக்தியான செயல்களையோ, ஆராதனை ஈடுபாடுகளையோ, ஜெப பங்களையோ அடையாளங்களாகப் பார்த்து நம்மை பக்தியானவர்கள் என்று எண்ணக்கூடாது. பாவத்தைச் ஜெயிக்க இயலாத பலவீனத்தையும், பிறரை நேசிக்க இயலாத நமது பலவீனத்தையும், சமாதான சந்தோஷத்தோடு வாழ இயலாத நம்முடைய பலவீனத்தையும் உணர்ந்து, கர்த்தரைத் தேட வேண்டும்.

தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை நமக்காகத் தந்தருளினார். (யோவான் 3:16) தேவன் தம்முடைய பிள்ளைகளாயிருக்க நம்மை அழைத்தார். (யோவான் 1:12) தேவன் தம்முடைய பரிசுத்த ஆவியைத் தந்து நம்மை தேவ உறவுடன் வாழ வழி செய்தார். (ரோமர் 8:16) இவற்றை நாம் விசுவாசித்து கர்த்தரை நமக்குள் அழைக்க முதல் கவனம் செலுத்த வேண்டும். நம்முடைய எந்தப் பக்திச் செயலையும் தேவ உறவின் அடையாளங்களாக எண்ணாமல், பாவ எதிர்ப்பு வலிமை, நற்குண ஆற்றல், தேவ சமாதான வாழ்க்கை ஆகியவற்றை அத னுடைய அடையாளங்களாக எண்ண வேண்டும்.

தேவ உறவை நமக்குள் நாம் திரும்பப் பெறும் போது தேவன் நமக்கு பிரதான மாகத் தருவதற்குச் சித்தமாயிருக்கும் தேவ சாயலையும் நாம் பெற்றுக் கொள்வோம். (ஆதியாகமம் 1:27)

